

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 13 கலசம் 154
Volume 13 Issue 154
மே 2019 ரூ. 25
May 2019 Rs.25
நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism








ஆல்பிரட் ஹிட்ச்காக்
பிரான்ஸிஸ் த்ரூபோ
என். ஜெகநாதன்
வடிவரசு
ஸிந்துஜா
டிசே தமிழன்
ராம் முரளி
டேவிட் டென்பி
பொ. கருணாகரமூர்த்தி
வண்ணநிலவன்
பாத்திமா மாஜிதா
டி. கண்ணன்
மார்ட்டின் பட்லர்
ஷங்கர்ராமசுப்ரமணியன்

# வேலை வாய்ப்பின்மை பிரச்சினைகளும் தீர்வுகளும்

கேள்வி 13 கலசம் 154



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மே-2019 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# ஆல்பிரட் ஹிட்ச்காக் & பிரான்ஸிஸ் த்ரூபோ

## தமிழில்: என். ஜெகநாதன்

அத்தியாயம் 16 / பகுதி 5

ஆல்பிரட் ஹிட்ச்காக்கை பிரென்ஞ்ச் வானொலிக்காக ஆகஸ்ட் 1962இல் பிரான்ஸிஸ் த்ரூபோ எடுத்த 25 பகுதிகளைக் கொண்ட நேர்காணலின் மொழிபெயர்ப்பு இது. திரைப்பட கலைஞர்கள் பங்குகொண்ட மிகச் சிறந்த உரையாடல்களில் ஒன்றாக இது உலகம் முழுதும் கொண்டாடப்படுகிறது.



*1978 முழுக்க நான் ஹிட்ச்காக்கை பார்க்கவில்லை. 7 மார்ச் 1979 அன்று, அமெரிக்கத் திரைப்பட கல்லூரி நடத்திய வாழ்நாள் சாதனையாளருக்கான சிறப்பான நினைவஞ்சலியின் போது, ஆழமான துக்க நினைவுகளுடன் இருந்தேன். என்னைப் போலவே என்னோடு கலந்துகொண்ட அனைவரும் இருந்தார்கள்.*

*சிபிஎஸ் அதை வெட்டியும் ஒட்டியும் அமெரிக்க தொலைக்காட்சியில் ஒளிபரப்பு செய்தது. இன்கிரிட் பெர்க்மென் அதற்கு தலைமை தாங்கினார். அவருக்கு புற்றுநோய் வந்திருந்தது. அதனை அவர் அறிந்திருந்தார். தனக்கு மரணம் நிகழப்போவதை அவர் உணர்ந்திருந்தார். அவர், ஹிட்ச்காக்கும் அவர் மனைவியும் உடல்நலம் பாதிக்கப்பட்டிருப்பது குறித்து மன வேதனைப்பட்டார். மேடைக்குப் பின்னால் கண்ணீர்விட்ட அவர், "ஏன் இதுபோன்ற நிகழ்ச்சிகளைத் தாமதமாக நடத்துகிறார்கள். கொஞ்சம் வருடங்களுக்கு முன்னால் செய்து இருக்கலாம்" என்றார்.*

*அதனால்தான் நானும் வந்திருந்தேன். ஹிட்ச்காக் பற்றியே புகழுரையை வழங்கினேன். "அமெரிக்காவில், இந்த மனிதரை ஹிட்ச் என செல்லமாக அழைக்கிறார்கள். பிரான்சில் Monsieur Hitchcock என அழைக்கிறோம்" எனப் பேச ஆரம்பித்தேன்.*

*ஆனால், என் மனம் அதில் செல்லவில்லை. புகழ்பெற்ற ஹாலிவுட் நடிகர்கள், விமர்சகர்கள், பிரமுகர்களுக்கு மத்தியில் ஹிட்க்காக்கும் அவரது மனைவியும் மேடைக்கு அழைத்து வரப்பட்டார்கள். ஆன்மா அற்றுப் போய், 'சைக்கோ' படத்தில் ஆன்டனி பெர்கின்ஸ் வைத்திருக்கும் பாதுகாக்கப்பட்ட அவரது தாயின் சடலம் போல இருந்தார்கள்.*

*இரண்டு வாரங்களில் நான் அறிந்த உண்மை என்னவென்றால், 'ஹிட்ச்காக் இனி படங்களை இயக்கமாட்டார். ஹிட்ச்காக் அவரது அலுவலகத்தை மூடிவிட்டார். தன் ஊழியர்களை வேலையிலிருந்து அனுப்பிவிட்டு, தன் வீட்டுக்குச் சென்றுவிட்டார். இங்கிலாந்து இளவரசி அவருக்கு சர் பட்டத்தை வழங்கினார். லண்டனில் பிறந்த இன்னொரு மேதை சாப்ளினுடனான ரகசிய பகையை சமன்படுத்திக் கொண்டார். மரணத்திற்காக காத்திருந்தார்.*

*சபிக்கப்பட்ட கொஞ்சம் வோட்கா அதனை துரிதப்படுத்தியது. 29 ஏப்ரல் 1980இல் அது நிகழ்ந்தது. ஹிட்காக்கின் வீழ்ச்சியான நாட்களை நான் மறக்க முயலும் போது, அந்த காலகட்டத்தில் நிகழ்ந்த ஒரு ஹிட்ச்காக்கின் புகழாஞ்சலியை நினைத்துப் பார்க்கிறேன்.*

*29 ஏப்ரல் 1974இல் நியூயார்க் லின்கோலின் பிலிம் சொசைட்டி ஏற்பாடு செய்த விழா அது. அவரது மரணத்திற்கு ஆறு வருடங்களுக்கு முன்னால் நிகழ்ந்த உணர்வைத் தூண்டும் நிகழ்வு.*

*சுமார் மூன்று மணி நேரத்துக்கும் மேலாக நூற்றுக்கும் மேற்பட்ட திரைப்பட விமர்சகர்கள் அவரது படங்களின் சிறப்பான இயல்புகளை அணியாகப் பிரிந்து வகைப்படுத்தினோம்.*

*திரையில் வருகை (ஹிட்ச்காக் தன் திரைப்படங்களில் தோன்றும் காட்சிகள் ), துரத்தல் காட்சிகள், மோசமான மனிதர்கள் (கொலைக் காட்சிகள், காதல் காட்சிகள்), இதோடு, மிக புத்திசாலித்தனமாக படமாக்கப்பட்ட இரண்டு காட்சிகள். Man Who Knew Too Much மோதல்கள், துரத்தல்கள்.*

*North By North West படத்தில் இடம்பெறும் விமான துரத்தல் காட்சியைப் பற்றி நான் பேசினேன். எல்லா சிறப்பான பிரிவுகளைப் பற்றிய சுருக்கமான விவரணைகளை, மிக அழகிய ஹிட்காக்கிய படங்களில் நடித்த நடிகைகள் கிரேஸ் கெல்லி, ஜோன் ஃபோட்டெயின், தெரசா ரைட், ஜானெட் லேல் தொகுத்து வழங்கினார்கள்.*

*நான் அந்தக் காட்சிகளை மனதார அறிந்திருந்தாலும் திறனாய்வாளர்கள் அது பற்றிச் சொல்லும் போது, நெக்குறுகலாக இருந்தது. நான் ஹிட்ச்காக்கின் நேர்மையைப் பற்றியும் அவரது படங்கள் பற்றிய தவறான புரிதல்களையும் பற்றி யோசித்து விக்கித்து நின்றேன். இப்படி சில காட்சிகள் காணவே கிடைக்காது. கொலைக்காட்சிகள் போல காதல் காட்சிகளும், காதல் காட்சிகளைப் போல கொலைக் காட்சிகளும்.*

*எனக்கு அவர் படங்களைப் பற்றி தெரியும். அவற்றைப் பற்றி நான் நன்றாகவே உணர்ந்திருந்தேன். அன்று மாலை நான் கண்ட காட்சிகள் என்னைப் பிரமிப்பூட்டின. வர்ணங்களின் சிதறல், வானவேடிக்கை, உணர்வுகளின் உந்தல், பெருமூச்சு, மரணத்தின் கிலுகிலுப்பை, அலறல், ரத்தம், கண்ணீர், முறுக்கப்*



படும் மணிக்கட்டுகள் இவையெல்லாம் ஹிட்காக்கின் திரைப்படத்தில் நான் கண்டவை. புலனின்பத்தைவிட அது சார்ந்த கற்பனைகள். காதலைப் போலவே மரணமும் ஒருமுகமானது என்பதே.

அன்று மாலை முடியும் முன்னால், பலத்த கரகோஷத்திற்கு நடுவே ஹிட்ச்காக் பின் மேடையிலிருந்து சிறிய உரையைப் பேச வந்தார். எல்லோரும் ஆச்சரியப்பட, விளக்குகள் அணைக்கப்பட ஹிட்ச்காக் மேடையில் தோன்றினார். ஆனால், திரையில், சில நாட்களுக்கு முன்னால், யுனிவர்சல் ஸ்டுடியோவில் அவர் திரைக்கு முன்னால் ஆற்றிய நன்றி அறிவிப்பைப் படமாக்கியது காண்பிக்கப்பட்டது.

மிண்டும் விளக்குகள் அணைந்து ஹிட்ச்காக்கும் அவரது மனைவியும் அமர்ந்திருக்குமிடம் மட்டும் வட்ட விளக்கால் காண்பிக்கப்பட்டது. பார்வையாளர்கள் அவரிடம் சில வார்த்தைகளாவது பேச வேண்டும் என்று கோஷமிட்டார்கள். அவர் சிறிய வரிகளில் சொன்னார்: "நீங்கள் திரையில் பார்க்க தோதுவானது காத்திரிக்கோல்" என்றார்.

இந்த இரட்டை அர்த்த வாசகம் ஹிட்ச்காக்கிற்கு எப்போதுமே உவப்பான ஒன்றாகும். இம்முறை Dial M For Murder கத்தரிக்கோலால் தன்னை மிரட்டுபவனை கிரேஸ் கெல்லி கொல்லும் காட்சியாகும். அதோடு, திரைப்பட தொகுப்பாளர்கள் படத்தொகுப்பின் போது வெட்டி, இணைத்து சிறப்பான காட்சியைக் கொண்டு வருவதையும் சேர்த்துக் குறிப்பிட்டார்.

இன்று, ஹிட்ச்காக்கின் படைப்புகள் பலரால் எடுத்தாளப்படுகிறது. ஆனால், அவரது படைப்பே முதல் தரமானது. ஏனெனில், அவர் ஒரு பெரும் கலைஞர். ஒன்றைப் பின் தொடரும் ஒன்று அதைப் பின் தொடர்ந்ததாக ஆகுமே அன்றி, பிறிதொன்றாய் ஆகாது. அதனை செறிவூட்டவும் முடியாது.

நிறைய பேர் போகிறபோக்கில், ஹிட்ச்காக்கின் விஞ்ஞானம், திறமை பற்றிச் சொன்னார்கள். குறுகிய பாதைகளைக் கடந்து,உணர்வுகளைத் தூண்டும் கலையே என்னைக் கவர்ந்தது.

ஹிட்ச்காக் தன் திறமைக்கு மீறி புகழப்பட்டார் என்று யாரும் சொல்லிவிட முடியாது. அவர் மக்களுக்காகவே திரைப்படம் எடுத்த ஒரு இயக்குநர். அதில் முதன்மையானவர். முரணாக தோற்றமளித்த போதிலும் ஹிட்ச்காக் தன் தகுதிகளாலான வியாபார யுக்திப்படக் கலைஞர். உண்மைதான், இதற்கான அங்கீகாரத்தை பரவலான பார்வையாளர்களிடமிருந்து பெறுவது அவ்வளவு கடினமான ஒன்று இல்லை. ஒரே புன்னகையில் அவர்கள் சொல்லிவிடுவார்கள்.



ஒருவர் எளிதில் உணர்வு புண்படக்கூடிய இயல்புடையவர்களாக இருந்து, அத்தகைய தோற்றமுள்ள படைப்புகளை காணும் அவர்கள், அத்தகைய படைப்பாளிகளோடு இணக்கமாக இருக்கிறார்கள். அத்தகைய படைப்பாளிகளுக்கும் அவர்கள் படைப்புக்கும் பிணைப்பு இருக்கிறது. என் பார்வையில் ஹிட்ச்காக் தனித்தன்மை வாய்ந்த மனிதர். அவருடைய தனிப் பண்புகளால் மட்டும் அல்ல. துடிப்புடைய அவரது சக்தி, அவரது நன்னடத்தை, அவரது எண்ணப் பிடிப்பு போன்றவை சாப்ளின், ரோஸ்ஸெலினி, ஹாக்ஸ், போர்ட் போன்றவர்கள் போலல்ல. அவர் நரம்புத் தளர்ச்சி உடையவர். அதே அதிர்வை உலகம் முழுதும் செலுத்துவது சாதாரணமானதல்ல.

அவர், தன் இளமைக் காலத்தில், அவரது உடல்வாகால் மற்றவர்களிடமிருந்து தான் தனிமைப்படுத்தப் படுவதை உணர்ந்தார். உலகிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, உலகை கடும் முனைப்புடன் பார்த்தார். எனக்கு பின்னால் ஸ்டுடியோவின் கனத்த கதவுகள் மூடப்பட்டிருந்தன என்ற வார்த்தைகளை அவர் இரண்டொருமுறை பயன்படுத்தினார். அது, ஒருவர் மதத்தைத் தழுவிக் கொண்டிப்பதுபோல, அவர் சினிமாவை தழுவிக் கொண்டிருப்பது போலிருந்தது.

வெளிப்படையாக ShadowOfADoubt படத்தில் உலகம் ஒரு பன்றித்தொழுவம். Notorious படத்தில் ஹிட்ச்காக்கை அடையாளம் கண்டுகொள்ளும் இடம், கிளாட் ரெய்ண்ஸ், சங்கோஜத்துடன், தன் அம்மாவின் அறைக்கு நள்ளிரவில் சென்று, “அம்மா நான் ஒரு அமெரிக்க உளவாளியைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறேன்” என்று குற்ற உணர்வுள்ள சிறு வயதுப் பையன் போல குற்றத்தை ஒப்புக்கொள்கிறான். I Confess படத்தில் தன் மனைவியிடம் சொல்கிறான்: “அவள் ஒரு தேவதை. யார் நமக்கு வேலை கொடுப்பார்கள். நாம் யாரையும் கவரவில்லை.” மீண்டும் ஹிட்ச்காக் பேசுவதை அடையாளம் கண்டுகொள்ள முடியும்.

கடைசியாக, Marnie படத்தில் ஹிட்ச்காக்கின் ஆழமான உணர்வைக் காண்கிறோம். ஷான் கானெரி தன் மனைவி டிப்பி ஹெட்ரனை ஆட்கொள்ள விரும்புகிறார் என்பதில் எதாவது சந்தேகம் இருக்க முடியுமா? கட்டுப்படுத்த, உரிமைகொள்ள, அடக்கி ஆழ அவரது கடந்த காலத்தை புலனாய்வு செய்து, அவருக்கு வேலை வாங்கிக் கொடுத்து, அவரது பணத்தைக் கொடுப்பது எல்லாமே ஹிட்காக்கின் எரிச்சலடைந்த மன உணர்வே.

இன்னும் வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானால், ஹிட்ச்காக் தன் படங்களில் மரபாக வந்து போவதைக் காட்டிலும் அதிகமாக,



அவர் படங்களில் அவரது உணர்வு மற்றும் சுருட்டி நீட்டப்படும் கட்டுப்பாடான வன்முறை தெரியும்.

ஹிட்ச்காக் மீது ஆந்த்ரே பாஸின் நிபந்தனையற்ற அனபைக் காட்டுபவர் அல்ல. ஆனால், அவர் சமநிலை என்ற முக்கிய வார்த்தையைப் பயன்படுத்துகிறார். அதற்கு நான் நன்றியுடையவனாக இருக்கிறேன். இந்த உலகம் முழுமைக்கும் ஹிட்ச்காக்கின் கருநிழல் உருவம் அறியும். அந்தக் கருநிழல் உருவம், பயமும் தடுமாற்றமும் கொண்ட உருவம். நான் அதிர்ஷ்டவசமாக லாஸ் ஏஞ் சல்ஸ் நகரில் லத்தின் அமெரிக்க பாதிரியாரான ஹியூக் கிரேஜ அவரது மரணத்திற்கு முன்பாக சந்தித்தேன். அவர்தான் அமெரிக்காவில் ஆந்த்ரே பாஸீனின் ஆங்கில மொழிபெயர்ப்பாளர். அதோடு அவர் ஹிட்ச்காக்கோடு லண்டன் புனித இக்னேஷியஸ் கல்லூரியில் படித்தவர். அவரது பளீரிடும் ஞாபகத்தில் ஹிட்ச்காக் எனும் குண்டான பையனைப் பற்றி விவரித்தார். குண்டான, எப்போதும் தனிமையிலிருக்கும், விளையாட முடியாமல் விளையாடுபவர்களை வெறுப்புடன் பார்த்துக் கொண்டிருக்கும் தோற்றம் அது.

ஹிட்ச்காக், தன் வாழ்வை எல்லோரைக் காட்டிலும் வெளிப்படையாகவே வாழ்ந்தார் என்பது கண்கூடு. டேவிட் ஓ. செல்கின், 1938இல் தொடர்பு அறும்போது அவர் மனைவிக்கு எழுதுகிறார்: "நான் கடைசியாக ஹிட்ச்காக்கை சந்தித்துவிட்டேன். அவர் கனமான நல்ல மனிதர். அவரோடு முகாமிட்டு பேச ஆசைப்படுவாய். "

இதனால்தான் ஹிட்ச்காக்கியன் என்ற பதம் சிறப்பான ஒன்றாக இருக்கிறது. ஒரு அப்பாவி மனிதன், தேடப்பட்டுக் கொண்டிருக்கும் இன்னொரு மனிதனைப் போலிருப்பதால் துரத்தப்படுவது,ஒருமனிதன் கூரையில் வழுக்கி விழும்போது ஏற்கனவே நீர்வழி குழாயைப் பிடித்து தொங்கும் இன்னொரு மனிதன் பாரம் தாங்காமல் முறிந்து விழுவது.

இந்த மனிதர் வலுக் கட்டாயமாகப் பயமுறுத்தும் கதைகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர். இந்த மனிதர் தன் 25ஆவது வதில் திருமணம் செய்துகொள்ளும் வரை தன் மனைவியை தவிர, வேறு பெண்ணை நுகராதவர். இந்த மனிதர் உண்மையாகவே கொலை, கள்ள உறவு,மோசடி செயல்கள் பற்றி படமெடுப்பதை மட்டுமல்ல, அவர் ஒருவரே அதனைத் திறம்படச் செய்வது எப்படி என்பதையும் அறிந்திருந்தார்.

ஹிட்காக், தன் திரைப்படங்கள் என்ன சொல்கின்றன என்பது குறித்து கவனம் செலுத்துபவர் அல்ல. மற்றவர்களை அறிந்துகொள்ளவே விரும்பினார். ஆனால், மற்ற இயக்குநர்கள் அதனைத் தெளிவுபடுத்தியதில்லை. நானும் ஹெலன்ஸ்காட்டும் அவர் எங்கு நிற்கிறார் என்று யோசிக்கும்போது, அவர், தான் தேர்ந்தெடுக்கும் கதையைக் கட்டமைக்கிறார், பின்விளக்கங்களாலும்விரிவுரைகளாலும்சொல்கிறார்.

திரைப்படம் கண்டுபிடிக்கப்படும் போது அது வாழ்வைப் பதிவு செய்யும் ஒரு விஷயமாக, புகைப்படத்தின் நீட்சியாகஇருந்தது. ஆவணப்படங்கள் எடுக்கப்படும்போதுதான் அதுகலையானது. இப்போது அது வாழ்வை பிரதிபலிக்கும் கண்ணாடியாக அல்லாமல் ஒரு கலையாக தன்னை செறிவூட்டிக் கொண்டது. மௌனப் படங்கள் கால இயக்குநர்கள் அனைத்தையும் கண்டறிந்தனர். கண்டறிய முடியாமல் போனவர்கள் தோல்வியடைந்தனர். ஆல்பிரட் ஹிட்ச்காக் அடிக்கடி வருத்தப்பட்டிருக்கும் விஷயம், காட்சிகளாக விரிவுபடுத்தப்படாமல் மேடை நாடகங்கள் போல திரைப்படங்கள் பதிவு செய்யப்படுவது குறித்துதான்.

ஹிட்ச்காக் வித்தியாசமான குடும்ப ரகம் சார்ந்தவர். சாப்ளின், Strohheim, லூபிட்ஸ் போல அவர் கலையைப் பயிற்சி செய்தவர் அல்லர். மாறாக அதன் சாத்தியங்களைத் தோண்டி துருவியவர். அதன் விதிமுறைகளைக் கண்டறிந்தவர். விதிமுறைகள் என்பது ஒரு நாவல் எழுதுவது போன்ற தேடலைக் கொண்டது.

ஹிட்ச்காக் வாழ்க்கையை தீவிரமாக வாழ்ந்தவர் அல்ல. வாழ்வைவிடவும் திரைப்படத்தில் தீவீரமாக வாழ்ந்தவர்.

(தொடரும்)

என். ஜெகநாதன் <Jaganathanvr4@gmail.com>

# வேலை வாய்ப்பின்மை பிரச்சினைகளும் தீர்வுகளும்!

பிரபு திலக்

இந்தியாவில் வேலையில்லா திண்டாட்டம் மிக மோசமான நிலையில் உள்ளது. கடந்த 45 வருடங்களில் இல்லாத அளவுக்கு 'வேலை வாய்ப்பின்மை' அதிகரித்துள்ளதாக தேசிய மாதிரி கணக்கெடுப்பு அலுவலகம் (NSSO) தெரிவித்துள்ளது.

மத்திய அரசு அமைப்பான தேசிய மாதிரி கணக்கெடுப்பு அமைப்பு, 2017-18ஆம் ஆண்டில் ஒவ்வொரு மாநிலத்திலும் நிலவும் வேலை வாய்ப்பின்மை குறித்துக் கணக்கெடுப்பு நடத்தியது. ஆறு ஆண்டுகளுக்கு முன்னர், 2011-12இல் இந்த கணக்கெடுப்பு நடத்தப்பட்டிருந்தது. அப்போது வேலை வாய்ப்பின்மை 2.3 சதவிகிதமாக இருந்தது. அது தற்போது 6.1 சதவிகிதமாக அதிகரித்துள்ளது. சென்ற ஆண்டில் (2018இல்) மட்டும் 1.1 கோடி மக்கள் தங்கள் வேலையை இழந்துள்ளனர். கடந்த நான்கு ஆண்டுகளில் சிறு, குறு தொழில்களில் மட்டும் 35 லட்சம் பேர் வேலை இழந்துள்ளனர். இதில் 23.5 லட்சம் பேர் கடந்த இரண்டு ஆண்டுகளில் வேலையை இழந்துள்ளனர். நடுத்தர தொழிலில் இந்த நான்காண்டில் 24 சதவிகிதம் பேர் வேலை இழந்துள்ளனர்.

இதனுடன், புதிய முதலீடு 14 வருடத்தில் இல்லாத அளவு மிக குறைந்திருக்கிறது; ஏற்கெனவே ஆரம்பிக்கப்பட்டு செயல்படுத்த முடியாமல் தடைப்பட்ட திட்டங்கள் இதுவரை இந்திய வரலாற்றில் இல்லாத அளவிற்கு உள்ளது போன்ற புள்ளிவிவரங்களும் இணைந்து இன்றைய இளைஞர்களின் எதிர்காலம் குறித்த அச்சத்தை ஏற்படுத்துகின்றன.

இதில் நம்மை அதிகம் கவலைக்குள்ளாக்கும் செய்தி, 'இதெல்லாம் வட மாநிலங்களுக்குத்தான்; தமிழகம் வளர்ச்சியடைந்த மாநிலம். எனவே, நமக்கு பிரச்சினை இல்லை' என்று நாம் இருந்துவிட முடியாது என்பதுதான். கடந்த ஆண்டில் 11 மாநிலங்களில் வேலை வாய்ப்பின்மை பிரச்சினை அதிகளவில் இருந்ததாகக் கூறியுள்ள தேசிய மாதிரி கணக்கெடுப்பு, அதில் தமிழகமும் இடம்பெற்றுள்ளதாக தெரிவித்துள்ளது. 2011-12 கணக்கெடுப்பின்போது ஹரியானா, அசாம், ஜார்க்கண்ட், கேரளா, ஒடிசா, உத்தராகண்ட், பிகார் ஆகியன மட்டுமே வேலை வாய்ப்பின்மை பிரச்சினையில் அதிகம் பாதிக்கப்பட்ட மாநிலங்களாக இருந்தன. தற்போதைய கணக்கெடுப்பில் பஞ்சாப், தமிழ்நாடு, தெலங்கானா, உத்தரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களும் இணைந்துள்ளன.

தமிழ்நாட்டில் முந்தைய கணக்கெடுப்பின்போது வேலை வாய்ப்பின்மை 2.2 சதவிகிதமாக இருந்தது. தற்போது 7.6 சதவிகிதமாக அதிகரித்து உள்ளது. 2017-2018இல் தமிழ்நாட்டில் மட்டும் 50,000 சிறு, குறு தொழிற்சாலைகள் மூடப்பட்டிருக்கிறது. ஒரே ஆண்டில் 5 லட்சம் பேர் வேலை இழந்துள்ளனர்.

இந்த தகவல்களை மறுத்து மத்திய அரசு, வேலை வாய்ப்பு குறித்த பல்வேறு புள்ளி விவரங்களை வெளியிட்டது. ஆனால், அவை சோடிக்கப்பட்டவை என்ற எதிர்க்கட்சிகள் வாதத்தை, அமித் பசோலெவை முதன்மை ஆய்வாளராகக் கொண்டு அசிம் ப்ரேம்ஜி பல்கலைக்கழகம் தயாரித்திருக்கும் State of Working India 2019 என்ற பெயரிலான அறிக்கை உறுதி செய்துள்ளது.

அசிம் ப்ரேம்ஜி பல்கலைக்கழக அறிக்கையில், இன்றைய வேலை வாய்ப்பற்ற கூட்டத்தில் கணிசமானோர் பட்டதாரிகள் என்பது கவனப்படுத்தப்பட்டுள்ளது. தற்போதைய சூழலில் ஒட்டுமொத்த வேலை வாய்ப்பின்மை 6 சதவீதமாக அதிகரித்திருக்கும் சமயத்தில், இது பட்டதாரிகள் மத்தியில் 12.7 சதவீதமாக இருக்கிறது. அதாவது வேலைவாய்ப்பற்ற கூட்டத்தில் பட்டதாரிகளே அதிகம். வயது வரம்பைப் பொறுத்தவரை, வேலை வாய்ப்பற்றோரில் 60 சதவீதத்திற்கு அதிகமானோர் 20-24 வயதிற்குப்பட்டவர்கள். அதாவது, இளைஞர்கள். கிராமப்புறங்களையும் நகர்ப்புறங்களையும் ஒப்பிட்டால், நகரங்களில் கிராமங்களைவிட வேலைவாய்ப்பின்மை அதிகம் (7.8 சதவீதம்). பாலின ரீதியாகப் பார்த்தால், ஆண்களைவிடப் பெண்கள் மத்தியில் வேலை வாய்ப்பின்மை அதிகம்.

வேலை கிடைக்கும், நாட்டின் வளர்ச்சியில் பங்கு கிடைக்கும் என நம்பி உயர்கல்வி, தொழிற்கல்வி என சேமிப்பைக் கரைத்து, கடன்கள் வாங்கி கல்வியில் முதலீடு செய்திருக்கும் குடும்பங்கள் இந்தியா முழுவதும் உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

உண்மைதான், உலகில் வேகமாக வளரும் பொருளாதாரங்களில் இந்தியா முன்னணியில் இருக்கிறது. 27 ஆண்டுகளுக்கு முன்பு, முன்னாள் பிரதமர் மன்மோகன் சிங்கால் நடைமுறைப்படுத்தப்பட்ட தாராளமயமாக்கல் பரிசோதனையின் பொருளாதார வளர்ச்சியால் முழு வறுமை மட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. அந்நியச் செலாவணி கையிருப்பு அதிகரித்திருக்கிறது. நுகர்வு பன்மடங்கு அதிகரித்திருக்கிறது. ஆனால் இன்று விவசாயம், கல்வி, சுகாதாரம், நகர உட்கட்டமைப்புகள்,



உற்பத்தித் துறை, ஏற்றுமதி என அனைத்தும் கடும் நெருக்கடிக்குள் இருக்கின்றன என்பதும் அதேயளவு உண்மை. திரும்பவும் தலை தூக்கும் பட்டினிச் சாவுகள் அதை உறுதிப்படுத்துகின்றன. கடந்த ஆண்டு மட்டும் 56 பேர் பட்டினியால் இறந்திருக்கிறார்கள்.

வருடம்தோறும் இரண்டு கோடி பேருக்கு வேலை வாய்ப்பளிப்போம் என்று வாக்குறுதி அளித்து பதவிக்கு வந்த பாஜக அரசு, வேலை வாய்ப்பின்மையைப் போக்க போதிய வழிமுறைகளை கையாளாமல், வெறுமனே தகவல்களை மறைப்பது, திசை திருப்புவது என்றே செயல்பட்டுள்ளது இப்போது உறுதியாகியுள்ளது.

பிரதமர் நரேந்திர மோடி கொண்டு வந்த பண மதிப்பிழப்பு, முந்தைய காங்கிரஸ் அரசின் ஜிஎஸ்டியை சரியான திட்டமிடல் இல்லாமல் நடைமுறைப் படுத்தியது போன்ற காரணங்களால் 2016 - 2018 காலக்கட்டத்தில் 50 லட்சத்திற்கும் மேலான ஆண்கள் வேலையிழந்துள்ளனர் என அசிம் ப்ரேம்ஜி பல்கலைக்கழக வேலை வாய்ப்பு குறித்த ஆய்வறிக்கை சொல்கிறது. பண மதிப்பிழப்பு, ஜிஎஸ்டியால் அதிகம் பாதிக்கப்பட்டவர்களில் கணிசமானோர் படிப்பறிவு குறைவாக உள்ளவர்கள். இவர்களில் பெரும்பாலானோர் முறைசாராத் தொழில்களில் வேலை பார்த்த காரணத்தால், அந்தத் தொழில்கள் பாதிப்புக்குள்ளான போது இவர்களும் கடுமையாக பாதிக்கப்பட்டார்கள்.

அசிம் ப்ரேம்ஜி பல்கலைக்கழக ஆய்வறிக்கை வேலை வாய்ப்பின் இன்றைய நிலை குறித்த தகவல்களை முன்வைக்கும் அதே சமயத்தில், வேலை வாய்ப்பை உருவாக்குவதற்கான சில திட்டங்களையும் முன்மொழிந்திருக்கிறது. நகர்ப்புற வேலை வாய்ப்புத் திட்டத்தை தொடங்குவதன் மூலம் சிறு நகரங்களை மேம்படுத்துவதும், வேலை வாய்ப்பளிப்பதும்; அனைவருக்குமான அத்தியாவசிய சேவைகளான கல்வி, மருத்துவம் மற்றும் வீடு ஆகியவற்றை நிறைவேற்றுவதன் மூலம் வேலைவாய்ப்பளிப்பது; நீண்டகால நோக்கில் உற்பத்தித் துறையை சீரமைப்பது என்று மூன்று வழிமுறைகள் விரிவாக ஆராயப்பட்டு முன்வைக்கப்படுகின்றன.

முந்தைய மன்மோகன் அரசு நடைமுறைப்படுத்திய கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டம் பரவலான வரவேற்பைப் பெற்றிருக்கிறது. அதன் விளைவாக கிராமப்புற கட்டமைப்பு ஓரளவு மேம்பட்டிருக்கிறது. வேலைவாய்ப்பு, ஊதியம் ஆகியவை அதிகரித்திருக்கின்றன. சாதி பாகுபாடின்றி, ஆணுக்கும் பெண்ணுக்கும் சமமான ஊதியம் சாத்தியமாகி இருக்கிறது. இதே போன்றதொரு திட்டத்தை, 10 லட்சத்திற்கும் குறைவான மக்கள் வசிக்கும் சிறு நகரங்களில் செயல்படுத்துவதன் மூலம் நகரங்களில் வேலை வாய்ப்பை பெருக்க முடியும்.

நகரங்களில் வேலைக்குச் செல்வோரில் 50 சதவீதத்திற்கும் அதிகமானோர் தினக்கூலிகள் மற்றும் சுயதொழில் சார்ந்தோர். அதே சமயம் நகரங்களின்

அடிப்படை சேவைகள் மற்றும் உட்கட்டமைப்பு வசதிகள் சீர்கெட்டுக் கிடக்கின்றன. நீர்நிலைகள் முறையாக பராமரிக்கப்படும் நகரங்கள் அநேகமாக இல்லை என்று சொல்லலாம். பெரும்பாலான நகரங்களில் அடிப்படை கட்டமைப்புகளை நிர்வகிக்க போதுமான ஆட்களும் இல்லை, தேவையான நிதியும் இல்லை. தற்போதைய அவசியம் சிறுநகரங்களின் உட்கட்டமைப்பு மற்றும் சேவைகளை இளைஞர்களுக்கான வேலை வாய்ப்போடு இணைப்பதாகும். இதனால் நகர நிர்வாகம், சுற்றுச்சூழல், வாழ்க்கைத் தரம் மேம்படும். சுற்றுச்சூழலை கருத்தில் கொண்டு வேலைவாய்ப்புகள் உருவாக்கப்படும் பட்சத்தில் பசுமை வேலைவாய்ப்புகள் உருவாகும். முறைசாராத் தொழில்கள் சார்ந்த வேலை செய்வோரின் ஊதியமும் அதிகரிக்கும்.

பொதுப்பணி சார்ந்த வேலைகளாகிய கட்டிடங்களைப் பராமரித்தல், நடைபாதைகளைச் சரி செய்தல், சாலைப் பணிகள் போன்ற வேலைகளுக்குப் பெரிய அளவிற்குக் கல்வியோ திறனோ தேவையில்லை. அதே போல, பசுமை வேலைகளாகிய நீர்நிலைகளை பராமரித்தல், நகர்ப்புற விவசாயம், பொட்டல்களை மேம்படுத்துதல், மலைப்பகுதிகளில் மண் அரிப்பைத் தடுத்தல் ஆகிய வேலைகளில் பட்டதாரிகளும், குறைவான கல்வி மற்றும் திறன் உடையோருக்குமாக வெவ்வேறு வேலைகளைப் பிரித்தளிக்க முடியும்.

கண்காணிப்பு மற்றும் கணக்கெடுப்பு வேலைகளில் நீர்நிலைகள், காற்று மாசுபடுதலைக் கண்காணித்து கணினி வழியாகத் தகவல்களைத் தொகுத்தல் போன்ற வேலைகளைக் கணினி சார்ந்த கல்வி கற்றோர் சிறப்பாக செய்ய முடியும். நிர்வாக உதவி சார்ந்த வேலைகளில் போதிய ஆட்களின்றி திண்டாடும் நிர்வாக ஊழியர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தல், பள்ளிக்கூடங்களில் ஆசியர்களே நிர்வாக வேலைகளைச் செய்து வரும் சூழலில், ஆசிரியர்களுக்குத் துணையாக நிர்வாக மற்றும் கணக்கு வழக்கு வேலைகளுக்கு உதவி செய்தல் போன்ற வேலைகளை பட்டதாரிகள் செய்ய இயலும். நலம் பேணுதல் சார்ந்த வேலைகளில், அங்கன்வாடி ஊழியர்களுக்கு உதவி, இருபாலரும் வேலைக்கு செல்லும் குடும்பங்களின் குழந்தைகளை கவனித்துக் கொள்ளுதல், கவனிப்பாரின்றி இருக்கும் முதியோர் நலன் பேணுதல், நகர்ப்புற ஏழைகளுக்கு உணவளித்தல் என்று விதவிதமான வேலைகளை உருவாக்க முடியும்.

இதனால் தேவையற்ற இடப்பெயர்வும் குறைக்கப்படும். ஏற்கனவே இத்தகைய திட்டங்கள் கேரளாவிலும் (அய்யன் காளி நகர்ப்புற வேலை வாய்ப்புறுதித் திட்டம்), மத்திய பிரதேசத்திலும் நடைமுறையில் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. திறன் குறைந்த வேலைகளில் ஆளுக்கு நாளைக்கு ஐநூறு ரூபாய்கள், கல்வித்தகுதி மற்றும் திறன் மிகுந்த வேலைகளுக்கு மாதம் பதிமூன்றாயிரம் உதவித்தொகை என்று இந்தத் திட்டத்திற்கான ஊதியத்தைப் பரிந்துரைக்கிறது இந்த அறிக்கை. இதற்கான செலவு இந்தியாவின் ஜிடிபியில் 1.7% முதல் 2.7% சதவீதம் வரை ஆகும். இதன் வழியாக நகர்ப்புற வறுமையில் இருந்தும், வேலை வாய்ப்பின்மையில் இருந்தும் மூன்று முதல் ஐந்து கோடி பேரை மீட்க முடியும் என்கிறது இந்த அறிக்கை.

மருத்துவக் கட்டமைப்பில் வேலை வாய்ப்பை உருவாக்குவது எளிதான விசயம். ஏற்கனவே அரசால் நிரப்பப்படாமல் இருக்கும் காலிப் பணியிடங்களை நிரப்பினாலே நான்கு லட்சத்தில் இருந்து ஆறு லட்சம் வரை வேலை வாய்ப்புகளை அதிகரிக்க முடியும். அனைவருக்கும் மருத்துவ வசதியை அரசு வழங்குவதன் வழியாக சுகாதாரம் மேம்படும், வேலை வாய்ப்பும் பெருகும். வேலை வாய்ப்புக்கு அடுத்தபடியாக மக்களை பயமுறுத்தும் மருத்துவ செலவும் குறையும்.

கல்வித் துறையை பொறுத்தவரைக்கும், நிரப்பப்படாமல் இருக்கும் ஆரம்பக் கல்வி மற்றும் உயர்கல்வி ஆசிரியர் பணியிடங்களை நிரப்பினாலே பத்து லட்சம் வேலை வாய்ப்புகளை உருவாக்க முடியும். இது தவிர அங்கன்வாடி ஊழியர் பணி நியமனங்கள் மற்றும் அங்கன்வாடி மேற்பார்வையாளர் பணி நியமனங்கள் வழியாக மேலும் ஒரு லட்சத்து முப்பதா யிரம் வேலை வாய்ப்புகளை உருவாக்க முடியும். இவை தவிர நாடெங்கும் ஒரு லட்சத்திற்கும் அதிகமான பள்ளிகள் ஒரு ஆசிரியரால் நடத்தப்படுகின்றன. இவற்றில் மாணவர் எண்ணிக்கைக்குத் தக்கவாறு பணி நியமனங்கள் நடக்கும் பட்சத்தில் எண்ணற்ற வேலைவாய்ப்புகள் உருவாகும். வகுப்பறைகளை மேம்படுத்தல், நூலக வசதி, கழிப்பறை வசதி என பல்வேறு உட்கட்டமைப்புகளை உருவாக்குவதன் மூலம் இன்னும் கூடுதலான வேலை வாய்ப்புகளை உருவாக்க முடியும். ஒப்பந்தப் பணி முறையை ஒழித்து, நிரந்த பணியாளர்கள் நியமிக்கப்படும் போது பணியாளர்கள் வாழ்க்கைத் தரம் மேம்படுவதோடு, கல்வியில் அவர்களது பங்களிப்பும் மேம்படும்.

வீட்டு வசதி துறையை பொறுத்தவரைக்கும், 2012 கணக்கெடுப்பின் படி இந்தியா முழுமைக்கும் அனைவரும் போதுமான வீட்டு வசதி பெற வேண்டுமானால் 1.8 கோடி வீடுகள் கட்டப்பட வேண்டும் என்று மத்திய வீட்டு வசதித்துறை அமைச்சகம் பரிந்துரைக்கிறது. வீட்டு வசதியை அரசுத்திட்டங்கள் வழியாக மட்டும் உருவாக்காமல், தனியார் பங்கெடுப்போடு நிறைவேற்றப்படுவதன் மூலம் மட்டும் 1.5 கோடி வேலைவாய்ப்புகளை உருவாக்க முடியும் என்கிறது 2018ஆம் ஆண்டு நிதி அமைச்சக அறிக்கை.

இது போல் உற்பத்தி துறைக்கு உயிரூட்டுதல் மூலமும் கணிசமான வேலை வாய்ப்புகளை உருவாக்க முடியும் என்கிறது அசிம் ப்ரேம்ஜி பல்கலைக்கழக ஆய்வறிக்கை.

வேலை வாய்ப்பினை உருவாக்குவதற்கான சாத்தியமான வழிமுறைகளை ஆராய்ந்து முன்னெடுப்பதென்பது அடுத்து பதவியேற்க இருக்கும் அரசின் முக்கியக் கடமையாகிறது. இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி தொடர்ந்து நீடிக்க வேண்டுமென்றால் கல்வி, மருத்துவம், வீட்டுவசதி போன்றவற்றில் அனைவருக்குமான அடிப்படை வசதிகள் மற்றும் சேவைகளை இந்தியா உறுதி செய்ய வேண்டும். வளர்ந்த நாடுகளின் நீடித்த பொருளாதார வளர்ச்சி, இந்த அடிப்படை வசதிகள் வழியாகவே உறுதி செய்யப்பட்டிருக்கிறது. ●

# வடிவரசு கவிதைகள்

1

என் சொற்கள்
வெறும் சொல்லாயிருக்கும் அந்திமப் பொழுதில்
அசைவுகள் வெறுமன்
அசைவாக இருந்தது
நிழல் சிந்த மறுத்த உடலிடம்
செய்வதறியாது கோபமுற்று
தனிமை பூசிக் கிடக்கையில் வந்தது
பொருளற்ற சொல்லொன்று எங்கிருந்தோ
என் அந்திமப் பொழுதை
அர்த்தமாக்கிய சொல்லுக்கு
பெயரொன்று வைத்தேன்
சொல்!

2

வெயிலோனை எழுப்பிவிட்டு
பறவைகளின் பேச்சொலி சேகரித்து
உள்ளமெங்கும் மகிழ்ச்சி பூச
மிட்டாய் கொடுக்குமந்நாளில்
ஒற்றையடிப் பாதையில் நான்கடி வரைந்து
கவிதைகள் தாராளமாய் சிந்தி
தென்றலோடு ஒன்றிலாய் நடந்துகொண்டிருந்தோம்.
தென்னையும் பனையும் பின்னணி இசைக்க
நடுநடுவில் இதழ்கள் சங்கதி சேர்க்க
இலந்தைமர ஓடை தொட்டு
கிணத்துமேட்டு தொட்டியின்மேல்
சிலைபோல் கலையியற்றினோம்.
வார்த்தைகள் வாய்ப்பின்றி கோபித்துக்கொள்ள
கரங்கள் ஓய்வின்றித் தேனெடுக்க
கொளஞ்சிமரம் வெட்கத்தில் தத்தளித்துக்
கொண்டிருந்தது.
எட்டாண்டுகள் ஊர்ந்தும்
யாதொரு சேதமுமற்று
நெஞ்சத்தாளில் சுடரும் அவ்வுயிர்படம்
எங்கேயோப் பறந்துபோனவளுக்கு
கடுகேனும் நினைவுள்ளதாவெனக் கேட்பாயோ
கொளஞ்சிப் பெண்ணே?

3

எங்கிருந்து கேட்கிறது
அந்தக் குரல்?

நித்திரையின்
மௌனம் கலைந்தா?
கவிதையின்
கண்ணீர் உடைந்தா?
நேற்றின்
வலிகள் கசிந்தா?
இல்லை
நிலவின்
முதுகு கிழிந்தா?

எங்கிருந்து கேட்கிறது
அந்தக் குரல்?

4

சஞ்சலத்தில் சாய்கையில்
மனதை ஆற்றுப்படுத்தும் புத்தகம்
விடியலை வாவெனக் கூட்டிவரும்
சிறகுமுளைத்தப் பக்கங்கள்
எதைக் கேட்டாலும் அதுவாகிடும்
கறுவண்ண வார்த்தைகள்
சாயத் தோளாகவும் பற்றக் கரமாகவும்
ஒளிந்துகொள்ள இடமாகவும் கூட
எல்லாமாய் இருக்கையில்
எல்லாமான ஒரெயொன்றைக் கேட்டேன்
எதுவுமற்றுப் போனது
சஞ்சலத்தில் சாய்த்து

**வடிவரசு<vadivarasu.s@gmail.com>**

# மனக்குகைச் சித்திரங்கள்

ஸிந்துஜா

ஓவியம்: சர்மிளா மோகன்தாஸ்

அன்று திடீரென்று தோன்றிவிட்டது குருமணிக்கு, கும்பகோணம் போக வேண்டுமென்று. உடம்பும் மனசும் பரபரத்தன. அப்போது ஆறு மணி இருக்கலாம். வானில் ஒரு பறவைக் கூட்டம் அம்புப் படுக்கையை விரித்துக்கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தது. ஒரு ஆட்டோ பிடித்து பஸ் ஸ்டாண்டுக்குப் போய் கும்பகோணத்துக்கு பஸ் பிடிக்கலாம் என்று நினைத்துக் கைபேசியில் தேடினான். கும்பகோணத்துக்கு ராத்திரி பத்தரைக்குத்தான் பஸ் இருந்தது. அதுவும் விடிகாலையில் நாலு மணிக்குப் போய் விடுமாம். அவனுக்கு அங்கு வேலையே நல்ல பகல் பொழுதில்தான். ரயிலில் திருச்சிக்குப் போய்விடலாம் என்று நினைத்தான். ஏழு மணிக்கு திருப்பதி எக்ஸ்பிரஸ் வண்டி இருக்கிறது. இப்போது கிளம்பினாலும் சென்ட்ரல் பஸ் ஸ்டான்டில் இறங்கி, சுப்பையர் பவனில் ரெண்டு இட்டலியை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, ரயிலில் ஏறி ஒன்பது மணிக்குத் திருச்சி போனால் ரயில்வே காலனியில் அவனுடைய அக்கா இருக்கிறாள். ஒன்பதரைக்கு அவள் வீட்டில் இருக்கலாம். ராத்திரி அங்கு தங்கி விட்டுக் காலையில் கும்பகோணத்துக்குப் பஸ் பிடித்துப் போக சரியாக இருக்கும்.



இரு நாள் பிரயாணத்துக்கு வேண்டிய உடைகளையும் மற்ற இத்யாதிகளையும் எடுத்துக் கட்டிலின் மீது வைத்தான். பையைத் தேடி எடுக்கையில் முருகனின் ஞாபகம் வந்தது. இது அவனுடைய பைதான். போன தடவை சென்னையில் இன்டெர்வியு போக வேண்டி இருந்த போது இந்தப் பையை வாங்கிவிட்டு இன்னும் திருப்பித் தரவில்லை. கும்பகோணம் போவதைப் பற்றி அவனிடம் சொல்லலாமா என்று நினைத்தான். வேண்டாம். அவன் இப்போது வீட்டிலிருக்க மாட்டான். மேலமாசி வீதியில் பெரிய கடை வைத்திருக்கிறான். குடும்பச் சொத்து. பணம் என்றால் அப்படி ஒரு பணம் வந்து கொட்டுகிறது. இப்போது அவனுக்கு போன் பண்ணிப் பேசலாம் என்றால் எதிர்சாரியில் இருக்கும் கடைக்குப் போய்த்தான் போன் செய்ய வேண்டும். லேண்ட் லைனில் அவ்வளவு சுலபமாகத் தொடர்பு கிடைத்து விடமாட்டேனென்கிறது. கடையில் இருக்கும் முருகனும் உடனே போனை எடுக்க மாட்டான். அப்படியே எடுத்தாலும் 'ஞாயித்துக்கிளமை போலாமே' என்பான். அன்றுதான் அவன் கடைக்கு விடுமுறை. இல்லாவிட்டால், 'அடுத்த வாரம் போகலாம்' என்று இழுத்தடிப்பான். 'என்னை விட்டுவிட்டு கும்பகோணத்துக்கு நீ மாத்திரம் எப்படிப் போகலாம்?' என்று பெரிய சண்டையே போடுவான். ஆனால், இப்போது குருமணியின் உடம்பின், மனசின் பரபரப்புக்கு முருகன் தடை போட்டு நிறுத்துவதை அவன் விரும்பவில்லை..

குருமணி திருச்சியை அடைந்து வண்டியிலிருந்து இறங்கும் போதே மணி ஒன்பதரை ஆகிவிட்டது. அடுத்த வாரம் ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் தலைமையில் அனைத்து இந்திய ரயில்வே தொழிலாளர்களின் மாபெரும் போராட்டம் என்று சிவப்புக் கலரில் ஸ்டேஷன் சுவர்களில் எல்லாம் சுவரொட்டிகள் பளபளத்தன. வேற வேலையில்லை என்று நினைத்துக்கொண்டே ஸ்டேஷனை விட்டு வெளியே வந்தான். ரயில்வே காலனியின் ஒரு கோடியில் அக்காவின் குவார்ட்டர்ஸ் இருந்தது. வேகமாக நடந்து சென்றான். தெரு விளக்குகளின் மஞ்சள் ஒளி மீது பூச்சிகள் பறக்கும் சத்தம் கேட்கும் அளவு தெரு அமைதியில் கிறங்கிக் கிடந்தது. வழியில் படுத்திருந்த நாய் ஒன்று அவனைப் பார்த்து விட்டு ஒரு முனகலுடன் கண்ணை மூடிக் கொண்டது. அக்கா வீட்டிலும் எல்லோரும் படுத்திருப்பார்களோ என்று சந்தேகம் மனதில் எழுந்தது. அக்காவின் வீட்டு வாசலில் ஒரு நைட் லேம்ப் எரிந்தது.

அக்காவின் வீட்டை வீடு என்று சொல்ல முடியாது, பெரிய பங்களா. அத்தான் ரயில்வேயில் பெரிய வேலையில் இருந்தார். வீட்டைச் சுற்றி வாசலைத் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் நந்தியாவட்டை, மல்லிப்பூ, கொன்னைப்பூ, வில்வமரம், ஒட்டுமாங்கன்னு, விபூதிப்பச்சை, காசித்தும்பை, சம்பரத்தங்கன்னு, எலுமிச்சங்கன்னுன்னு பூத்துக் குலுங்கியும், காய்த்துத் தொங்கியும் செடி கொடிகள் நிறைந்து கிடந்தன. பழைய காலத்துப் பங்களா. உள்ளே நுழைந்ததும் தென்படும் திண்ணையைத் தாண்டி ஹாலுக்குள் போனால் பார்க்கவே மலைப்பு உண்டாகும். ஹால் இருக்கும் இடத்தை மதுரையில் என்றால் மூன்று ரூம்புகள் கட்டி அநியாய வாடகைக்குக் கொடுத்து விடுவான்கள். அப்புறம் ஆளை அடிக்கிறாற் போல வாட்டசாட்டமாக பூஜை அறை, மூன்று படுக்கை அறைகள், பெரிய முத்தம், அதற்கும் அப்பால் துணி துவைக்க குளிக்க என்று நீண்டு கொண்டே போகும் வீடு. சமையல் அறையில் நடந்து வேலை செய்தால் வேலை முடிந்த பிறகு படுத்துக்கவேன்னு கால்கள் கெஞ்சும் என்று அக்கா சொல்வாள். யாரோ பிரிட்டிஷ்காரன் தங்குவதற்கு என்று கட்டிய பங்களா. அடுத்து வரும் தலைமுறைக்கும் வேண்டும் என்று நினைத்துக் கட்டிவிட்டான் போலிருக்கிறது. ஆனால், அவன் அந்த வீட்டுக்குள் நுழைந்துகூடப் பார்க்க முடியாதபடி அவனுடைய சொந்த ஊருக்கு அவனைக்

காலம் விரட்டிவிட்டது. முப்பது முப்பத்தி ஐந்து வருஷத்தை மேனியில் தாங்கிக்கொண்டு நிற்கும் வீடு. இந்த வீட்டுக்குள் முதன் முதல் வந்த போது அவன் மதுரையில் காலேஜில் படித்துக் கொண்டிருந்தான், விடுமுறையைக் கழிக்க என்று அக்காவின் வீட்டில் வந்து தங்கினான். அப்போதுதான் அவனுக்கு யமுனாவின் பரிச்சயம் ஏற்பட்டது.

அவனைப் பார்த்ததும் அக்கா கண்களைப் பெரிதாக உருட்டி வியப்புடன் பார்த்தாள்.

"யாரு குருவா? வாடா, வா. எப்படிடா இருக்கே? என்ன திடீர்னு இந்தப் பக்கம் காத்து அடிச்சிருக்கு? இன்டெர்வியூவா? ஒரு போனுகூட பண்ணாம வந்துட்ட? சாப்பிட்டியா?" என்று கேள்விகளாக இறைத்தாள்.

அவனது பதிலை எதிர்பார்க்காதவள் போல, "இரு, குமுட்டிய பத்த வச்சு உப்புமா கிண்டித் தரேன்" என்றாள். அவனுக்கு வேண்டாம் என்று மறுக்கத் தோன்றாமல் பசி வயிற்றைக் கிள்ளியது. அவனும் அக்காவுடன் சேர்ந்து சமையல் உள்ளுக்குள் சென்றான்.

"அத்தான் எங்க?" என்று கேட்டான்.

"அவர் கும்மாணம் போயிருக்காரு."

அவன் திடுக்கிட்டு "கும்மாணமா?" என்று கேட்டான்.

அக்கா அவனைப் பார்த்து, "அதுக்கு எதுக்குடா உனக்கு இப்பிடி தூக்கிவாரிப் போடுது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள். அடுப்பைப் பற்ற வைத்து சமைக்க ஆரம்பித்தாள். "மொதல்ல இன்னிக்கி ராத்திரியே வந்துடுவேன்னாரு. டெல்லில யாரோ அவுங்க மினிஸ்டரி ஆபிசரு வந்திருக்கானாம். மகாமகம் வருதில்ல? அதுக்கு எங்கெங்கோர்ந்தெல்லாம் ஜாஸ்தி ட்ரெயின் விடணும்னு முன்னோட்டம் பாக்கணுமாம். உங்க அத்தானையும் இளுத்துகிட்டு போயிருக்காரு. விடியாக் காலேல வந்துருவாங்க" என்றாள்.

பிறகு, "நாளைக்கு என்ன வேலை உனக்கு இங்க?" என்று கேட்டாள்.

"கும்மாணத்துக்கு போணும்."

"அடி சக்கை. உங்க ஆபிஸ்காரனும் மகாமகத்துக்கு எதாவது பண்ணப் போறானுகளா?" என்று அக்கா சிரித்தாள்.

தடுமாறிக் கொண்டிருந்தவன் கையில் ஊன்றுகோலைக் கொடுத்ததைப் போல, "ஆமா. என்னமோ கிறுக்கு பிடிச்சு அலையறானுங்க" என்று சொல்லிவிட்டு நிறுத்திக்கொண்டான். இரவு உணவு அருந்திவிட்டு படுக்கையில் விழுந்த போது உடனேயே கண்களை உறக்கம் வந்து தழுவிக்கொண்டு விடவில்லை. யமுனாவைப் பற்றிய ஞாபகம் வந்தது.

அவளை முதன்முதலாக சந்தித்தது இதைப் போன்ற இரவில்தான். இரவு என்றால் பத்து மணி யில்லை, ஏழு மணியிருக்கலாம். ஆண்டார் தெருவில் பத்மநாபன் ஸார் வீட்டுக்கு அன்று மாலை போ யிருந்தான். அவர் அவனுக்கு காலேஜில் எகனாமிக்ஸ் லெக்சரர். அவருக்குக் கர்நாடக இசையில் அவனைப் போலவே ஈடுபாடு இருந்ததால், ஆசிரியர் - மாணவன் தொடர்பு எல்லைக்கு மேலாக அவர்களிடையே நட்பு தோன்றியிருந்தது. ஆறு மணிக்கு இருவரும் ஸ்ரீரங்கம் கோவிலுக்குச் சென்று விட்டு ஸாரின் வீட்டுக்குத் திரும்பியிருந்தார்கள்.

பத்மநாபனின் தங்கை நந்தினி அவர்களிருவருக்கும் நன்னாரி சர்பத் கொண்டு வந்து கொடுத்தாள். வெளி யிலிருந்து வந்தவுடன் வியர்க்க ஆரம்பித்த சமயம், அந்தக் குளிர் நீர் இதமாக இருந்தது.

அப்போது "நந்தினி !" என்று யாரோ அழைக்கும் குரல் கேட்டு நந்தினி அந்தப் பக்கம் திரும்பினாள். குருமணியும் அந்தக் குரலின் இனிமையால் கவரப்பட்டவனாக அங்கே நோக்கினான். நன்னாரியின் குளிர்ச்சியைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு நின்ற குரல். பக்கத்து வீட்டு வாசலில் நின்ற ஓர் யுவதி நந்தினியைப் பார்த்துப் புன்னகை செய்தவாறு நின்றாள். குருமணி ஒரு நிமிஷம் ஸ்தம்பித்துப் போய்விட்டான். என்ன ஒரு அழகு! நல்ல உயரத்துடன் வெடவெடவென்று மெல்லிய உடல். கால், கை விரல்களின் நீளம், குவிப்பு, சிவப்பு நிறம் எல்லாம் பளீரென்று பொலிந்தன, கறுப்புப் புடைவையின் பின்னணியில் சிவப்புப் பாவாடையும், நீலநிற ரவிக்கையும் அணிந்திருந்தாள். குருமணியின் உள்ளம் பரவசத்தைத் தாளாமல் துடித்தது. சாதாரணமாகக் காணமுடியாத அழகு.

நந்தினி அவளைப் பார்த்து, "யமுனா? எப்போ வந்தே ஊர்லேந்து?" என்று கேட்டாள்.

"இன்னிக்கு மத்தியானந்தான்" என்றாள் யமுனா.

"அப்பா, அம்மா எல்லாரும் சவுக்கியம்தானா?" என்று பத்மநாபன் அவளைப் பார்த்துக் கேட்டார். "நான் கூட உங்க ஊருக்கு வரணும்னுதான். தள்ளிப் போயிண்டே இருக்கு" என்றார்.

"எல்லாரும் சவுக்கியம்தான் மாமா. நீங்க அடுத்தவாரம் கும்பகோணம் வாங்களேன். செம்மங்குடி பேர்ல ஒரு வாரம் கச்சேரி வச்சிருக்காங்க. பெரிய கையெல்லாம் வரப் போறதா ஊரெல்லாம் ஒரே பேச்சு" என்றாள்.

குரு ஆவலுடன் அவள் பேச்சைக் கவனித்தான். அவன் துறுதுறுப்பைப் பார்த்து பத்மநாபன், "குரு, போய்ட்டு வரலாமாடே?" என்று சிரித்தார்.

யமுனாவின் பார்வை குருமணியின் மேல் விழுந்தது.

பத்மநாபன், "யமுனா, இவன் என் ஸ்டூடன்ட். மதுரைல இருக்கான். இவனும் ஒரு பெரிய குட்டிக் கலைஞன்தான்" என்றார்.

யமுனா புன்முறுவலுடன் அவரிடம், "குட்டியா? பெரிசா?" என்று கேட்டாள்.

நந்தினியால் சிரிப்பை அடக்க முடியவில்லை.

"ஒரு பாட்டு கேக்கரையா? புலியா, பூனையான்னு உனக்கே தெரியும்" என்றவர் குருமணியின் பக்கம் திரும்பி, "சரியா?" என்றார்.

குருமணியின் மனதில் யமுனாவைக் கவர வேண்டும் என்ற வேட்கையே முழுதும் இருந்தது. கோபாலகிருஷ்ண பாரதியின், 'சபாபதிக்கு' என்ற பாடலை ஆபோகி ராகத்தில் பாடினான். ஆபோகிக்கு இயல்பாகவே கேட்பவரின் செவியில்



கண்ணைக் கூச வைப்பது போன்ற பிரகாசத்தை ஏற்படுத்தும் வல்லமை உண்டு. அதோடு கேட்கும் நபரிடத்தில் ஒரு தொற்றிக்கொள்ளும் உற்சாகத்தையும் இனிமையையும் ஏற்றி வைக்கக்கூடியது. தைவதத் திலிருந்து ஸட்ஜத்துக்கும் அதே வழியில் திரும்பும் போதும் வெகு ஜாக்கிரதையாக நிஷாதத்தைத் தவிர்த்துவிட்டு குருமணி பாடிய போது அருவி போல ஆரம்பித்து, கூழாங்கற்களில் சலசலவென்ற ஓசையுடன் தவழ்ந்து வந்து, நதியாய் விரிந்து அலையாய்ப் பொங்கி இறுதியில் சலனமற்றுக் கடலில் சங்கமமாயிற்று. பிருகாக்கள் பொலபொலவென்று கொட்டின. ஸ்வரப்பிரஸ்தாரங்களில் துடுக்கும் இருந்தது. மிடுக்கும் இருந்தது.

அவன் பாடி முடித்ததும் ஒரு நிமிஷம் யாரும் பேசவில்லை. அப்புறம் யமுனாதான் கைதட்டினாள். பத்மநாபன் அவனை அரவணைத்துக் கொண்டார்.

“அடேயப்பா!” என்றாள் யமுனா. “இன்னும் பக்கவாத்தியம் எல்லாம் வச்சு பாடினால் தூக்கியடிக்கும் போல இருக்கே. என்ன குரல்! என்ன குரல்!” என்று மனதாரப் பாராட்டினாள். அவனை அவள் பார்த்தபோது, இனி அவளால் தன்னை மறக்க முடியாத ஒரு பிம்பத்தை ஏற்றி வைத்துவிட்டதாக அவனுக்குள் நினைத்துக்கொண்டான்.

மறுவாரம் அவனும் பத்மநாபனும் கும்பகோணம் போனார்கள். அங்கே கர்ணக்கொல்லை அக்ரகாரத்தில் அவருடைய சித்தப்பாவின் வீடு இருந்ததால் அங்கே போய்த் தங்கினார்கள். குருமணிக்கு யமுனா வீட்டில் போய்த் தங்கவில்லையே என்று இருந்தது. ‘யார் வீட்டில் போய் யார் தங்குவது?’ என்று அவன் மனம் அவனை அதட்டியது. கொஞ்ச நேரம் கழித்து ஒரு கேலிச் சிரிப்பையும் அவன் மேல் எறிந்தது.

கச்சேரிகள் நடந்த ஏழு நாட்களிலும் யமுனாவும் வந்திருந்தாள். ஒவ்வொரு முறையும் அவளைப் பார்க்கும் போதும் தனது மனதில் அவளைப் பற்றி எழுந்த உயர்வான எண்ணங்கள் அவனுக்கு உற்சாகத்தைத் தந்தன. தினமும் அவள் உயரத்துக்குப் பொருத்தமாக ஸாரி கட்டிக் கொண்டு வீசி நடந்து வரும் போதும், அவனிடமும் பத்மநாபனிடமும் அவள் சிரித்துக்கொண்டே பேசிய போதும் இன்னதென்று தெரியாத பெருமை மனதில் பொங்கிற்று.

ஒருநாள் கச்சேரி முடிந்தபின் அவனும் பத்மநாபனும் யமுனாவுடன் அவள் வீட்டுக்குச் சென்றார்கள். அங்கு சாப்பிடுவதாக ஏற்பாடு. யமுனாவின் வீட்டுக்குள் நுழைகையில் அவளது அம்மா வந்து அவர்களை வரவேற்றாள். சின்ன வயதில் அவள் யமுனாவைப் போல அழகாக இருந்திருப்பாள் என்று காலம் மறைத்துவிட முடியாத பொலிவு அவள் முகத்தில் வீசிற்று. பழைய வீடும் புத்தொளி வீசி பெண்கள் இருவரின் கைவேலைகளை உரத்துக் கூறின. அம்மாவும் பெண்ணும் செய்த உபசாரத்தில் திரும்பக் கர்ணக்கொல்லை அக்ரகாரத்துக்கு நடந்து போய்ச் சேருவோமா என்று ஆகிவிட்டது இருவருக்கும்..

திருச்சிக்குத் திரும்பிய பின்னும், பிறகு மதுரை வந்த பின்னும் யமுனா அடிக்கடி அவன் நினைவை ஆக்கிரமித்திருந்தாள். எப்போதும் அவளை ஓடிப் போய்ப் பார்க்க வேண்டும் போலிருந்தது. படிப்பையும் பரிட்சையையும் வைத்துக்கொண்டு அது நடக்காத காரியம் என்று தெரிந்திருந்தாலும். எப்போதும் பத்மநாபன் ஸாரைப் பார்க்கும்போது அவர் வாயிலிருந்து யமுனாவைப் பற்றி ஏதாவது பேச்சு வருமா என்று ஏங்கிக் கொண்டிருப்பான். ஆனால், ஒரு தடவைகூட வந்ததில்லை.

காலையில் ஆறேமுக்காலுக்கே குருமணி கிளம்பி விட்டான். ஐந்து மணிக்கு முழிப்பு வந்துவிட்டது. அவன் ஓசைப்படாமல் எழுந்து வெளியே வந்தான். அக்காவும் குழந்தைகளும் பெட்ரூமில் தூங்கிக் கொண்டிருந்தார்கள். வெளியே விடிகாலையின் லேசான குளிர் காற்று வீசிக்கொண்டிருந்தது. மரங்களின் இலைகள் படபடத்து ஏற்படுத்திய இசைக்குப் பதில் ஒலியாக எங்கிருந்தோ ஒரு குயிலின் கூவல் கேட்டது. நாலைந்து நாகணவாய்கள் ‘சிர்’ரிட்டன. ஒரு ஜோடி அங்குமிங்கும் அசைந்து அசைந்து நடந்து மண்ணைக் கொத்திக் கொண்டிருந்தது. கொல்லையில் இருந்த கிணற்றிலிருந்து இருந்து வாளியில் நீரை எடுத்து ‘மடேர் மடேர்’ என்று தலையில் கொட்டிக்கொண்டான். உடம்பின் உஷ்ணத்துக்கு அது இதமாக இருந்தது. உள்ளே வந்து உடை மாற்றிக்கொண்டு கிளம்பும் போது ஆறு மணி. அக்கா சத்தம் கேட்டு எழுந்து விட்டாள்.

“கிளம்பிட்டியா? அதுக்குள்ளே என்னடா அவசரம்? இந்தா இருக்கற கும்மோணத்துக்கு பஸ்ஸும் ட்ரெயினும் போயிகிட்டே இருக்கு. அப்படி என்னா வேலை? இட்டலிக்கு அரைச்சு வச்சிருக்கேன். நாலு சாப்பிட்டுவிட்டு போ” என்று அவனை மடக்கி நிறுத்திவிட்டாள். அவள் நாலு என்று சொல்லி ஆறு இட்டிலியை இலையில் வைத்துவிட்டாள்.

“உனக்கு சின்ன வயசுல கணக்குப் பாடம் வராதுன்னு அம்மா சொல்லிக்கிட்டு இருப்பாங்க. அது சரியாத்தான் இருக்கு” என்று அவன் இட்டலியை எடுத்துச் சாப்பிட்டான்.

அவள் சிரித்தபடியே, “ரொம்ப சின்னதாதான இருக்கு. இன்னும் ரெண்டு போட்டுக்கயேன்” என்று பாத்திரத்தை எடுத்துக்கொண்டு வந்தாள். அவன்

அவசர அவசரமாக இலையை மடித்து எழுந்து விட்டான்.

"நேத்திக்கு வரப்போ, பஸ் ஸ்டாண்டுல சுப்பையரு பவன்லகூட இட்டலிதான் சாப்பிட்டேன். ஆனா அக்கா ஒன் கைமணம் எங்கியும் வராது" என்றான் கை கழுவ கொல்லைப்புறம் நடந்தபடி.

"சுப்பையரு பவனா?" என்று அக்கா குழப்பமாகக் கேட்டாள். "அவர் ஓட்டலை மூடி பத்து வருசமாச்சேடா!"

அவன் குழாயில் கைகழுவிக் கொண்டு வந்தான். "சரி, அப்ப நான் கிளம்பட்டா? திரும்பி வரப்ப இங்க வந்து அத்தானையும் பாத்திட்டு போறேன்" என்றான்.

ஏழேகாலுக்கு மயிலாடுதுறை பாசஞ்சரில் ஏறினான். ஒன்பதரைக்குப் போய் விடலாம். அக்கா அவனிடம் அவ்வளவு அவசரமான வேலை என்னடா என்று கேட்டதற்கு அவன் அப்போது பதில் சொல்லவில்லை. யமுனாவைப் பார்க்கப் போகிறேன் என்று சொன்னாலும் அவளுக்குப் புரியப் போகிறதா?

கும்பகோணம் ஸ்டேஷனில் இறங்கியதும் ஊரிலுள்ள அத்தனை பேரும் கும்பகோணம் டிகிரி காபி மட்டும்தான் போட்டு குடிப்பார்கள் போல என்று அப்படி ஒரு விளம்பர இரைச்சல் சுவர்களிலும் தள்ளு வண்டிகளிலும் டி.வி. விளம்பரங்களிலும் பரவி யிருந்தது. யமுனாவுக்கும் காப்பி ரொம்பப் பிடிக்கும் என்று அவள் சொல்லியிருக்கிறாள்.

ஸ்டேஷனை விட்டு வெளியே வந்ததும் 'சுள்'ளென்று வெய்யில் முகத்தில் அறைந்தது. கும்பேச்வரன் கோ யிலைப் பார்க்க நடந்தான். சாலையில் நிறைய வடக்குத்தி முகங்கள். எப்படித்தான் அழுக்குப் படிந்த ஒரு கும்பலாக ஆண்களும் பெண்களுமாக எங்கோ ராஜஸ்தானிலிருந்தும் பீஹாரிலிருந்தும், உத்திர பிரதேசத்திலிருந்தும் இன்னும் கண்காணாத இடங்களிலிருந்தும் கிளம்பி நூற்றுக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்து கோயில் கோயிலாக ஏறி இறங்கி, கிடைத்ததை வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டு, கிடைத்த இடத்தில் படுத்துக்கொண்டு... எதற்காக இத்தனை முயற்சிகள், கஷ்டங்கள்? எதிலிருந்து விடுபடத் துடித்து மயங்கவும் மறக்கவும் முனைந்துகொண்டு?

கோயிலுக்கு வடக்குப் பக்கமாக இருந்த கடைத்தெருவில் நடந்தான். மருந்துக் கடைகள், சந்தனக் கடைகளைத் தாண்டியதும் ஈயப் பாத்திரக் கடைகள் தென்பட்டன. அவற்றைக் கடந்து, தெரு முக்கில் திரும்பி துக்காம்பாளையத் தெருவைப் பார்க்க நடந்தான். துக்காம்பாளையத் தெருவில் எப்போதும் போல வெளிச்சம் அவ்வளவு அதிகம் இல்லை. கும்பகோணத்துத் தெருவில் நடக்கிறாற் போலவே இராத உணர்ச்சி. ஏதோ ஒரு சூன்யம், ஏதோ வறட்சி அங்கு மனதைப் பிடித்துக்கொண்டு விடும். யமுனா வீடு இங்கு இல்லாவிட்டால், இந்தத் தெருவுக்கே வரவேண்டியதில்லை. போயும் போயும் இந்தத் தெருவிலா வீட்டை வாங்க வேண்டும்?

யமுனாவின் வீட்டை அடைந்த போது வாசல் கதவு திறந்திருந்தது. அவன் வெளியே நின்று "ஸார், ஸார் " என்று கூப்பிட்டான்.

உள்ளேயிருந்து வந்தவர் அவனைப் பார்த்து,



"வாங்க. யாரைப் பாக்கணும்?" என்று கேட்டார். இதற்கு முன்னால் அவரைப் பார்த்த ஞாபகம் குருமணிக்கு இல்லை. யமுனாவின் தந்தையா அல்லது வேறு யாரேனும் உறவினரா?

"யமுனாவைப் பாக்கணும். இது யமுனாவோட வீடுதானே?" என்றான் குருமணி.

"ஆமா" என்ற அவர் உள்பக்கம் திரும்பி "யமுனா? யமுனா! உன்னைப் பாக்க யாரோ வந்திருக்காங்க" என்று கூப்பிட்டார். பிறகு அவனைப் பார்த்து, "இப்போ வந்திருவா. உள்ளே வந்து உக்காருங்க" என்று அழைத்தார்.

குருமணி கூடத்தில் இருந்த நாற்காலி ஒன்றில் உட்கார்ந்தான். சுற்றிலும் பார்வையைச் செலுத்தினான்.

வீடு புதிது மாதிரி இருந்தது. எங்கு பார்த்தாலும் நீலம் கலந்து அடித்திருந்த சுண்ணாம்பு கண்ணுக்குக் குளிர்ச்சியாக இருந்தது. நடையின் நிலையில் வர்ணக் கண்ணாடிக் குழாய்களில், இரண்டு மயில்கள் ஒன்றையொன்று பார்ப்பது போல ஜோடித்துத் தொங்கிக் கொண்டிருந்தன. அலமாரிக்குள் இரண்டு மூன்று பாட்டில்கள். பாட்டிலுக்குள் பூங்கொடிகளும் செல்லுலாயிட் கிளிகளும் கொண்ட மணிகளால் ஆன மரங்கள் இறக்கப்பட்டிருந்தன. காமிரா உள்நிலையில் ஒரு பூவேலை செய்த வெல்வெட் துணி, ஒரு காட்டுக் காட்சியைச் சித்தரித்தவண்ணம் பளபளவென்று விளக்கொளியில் மின்னியவாறு சிறுகாற்றில் லேசாக அசைந்து கொண்டிருந்தது. சிறு சிறு மான்களும் மயில்களும் கொடிகளும் கொண்ட அந்தக் காட்சியை எப்படித்தான் யமுனா போட்டாளோ! கூடத்துச் சுவரில் தஞ்சாவூர் பாணியில் எழுதிய ராம பட்டாபிஷேகம், தவழும் கிருஷ்ணன், கஜலக்ஷ்மி இப்படிப் பல படங்கள் மாட்டியிருந்தன.

யாரோ நடந்து வரும் சப்தம் கேட்டு அவன் திரும்பினான். இருபது வயது மதிக்கத்தக்க ஓர்

இளம்பெண் வந்து நின்றாள்.

“யார், நீங்க? உங்களை நான் பார்த்ததே இல்லையே?” என்றாள் அவள்.

“நான் யமுனாவைப் பாக்க வந்திருக்கேன்” என்றான் குருமணி.

“நான்தான் யமுனா!” என்று சிரித்தாள் அந்தப் பெண்.

அவன் .திகைத்தான்.

“இல்ல, அவ வேற” என்றான். பிறகு, “நான் யமுனாவின் அம்மாவைப் பாக்கணும்“ என்றான்.

“எங்கம்மா திருநெல்வேலிக்கு போயிருக்கா” என்றாள் அந்தப் பெண் அவனைக் கூர்மையாகக் கவனித்தபடி.

“அவங்க ரெண்டு பேரையும் எனக்கு நல்லா தெரியும். நீ யமுனா இல்ல.”

“அப்ப நீங்க வந்த வீட்டு விலாசம் தப்பு” என்றாள் பரிவும் கனிவும் கலந்த குரலில். வழி தெரியாமல் வந்துவிட்ட பறவையைப் பார்ப்பது போல அவள் அவனைப் பார்த்தாள்.

“இந்த வீடுதான்” என்று அவன் சுற்றும் முற்றும் நோக்கினான். “அதோ அந்த ராம பட்டாபிஷேகம், தவழ்றகிருஷ்ணன் படமெல்லாம் அப்படியேஇருக்கே!” என்று சுவரைப் பார்த்தான்.

அவள் அவன் பார்வை சென்ற இடத்தைப் பார்த்துவிட்டு அதிர்ச்சியுடன், “அந்த மாதிரி ஒரு படமும் அங்க இல்லையே!” என்றாள்.

ஸிந்துஜா **<weenvy@gmail.com>**

# பயண நூல்கள்

## டிசே தமிழன்

The Yellow Envelope *by* Kim Dinan



'மஞ்சள் கடித உறை'என்ற நூல், நாளாந்த அமெரிக்கா வாழ்க்கை முறையில் சலித்து ஒரு சோடி தமது சொத்துக்களை விற்றுவிட்டுப் பயணிப்பதைப் பற்றியது. நெடுங்காலப் பயணங்களுக்குரிய பயங்களோடும் பதற்றங்களோடும் எதிர்காலம் எதை மறைத்து வைத்திருக்கின்றது என்ற ஆவலோடும் அவர்கள் புறப்படுகின்றார்கள். இப்படி நெடும்பயணத்தை தென்னமெரிக்காவில் ஈக்குவாடார், பெருவில் தொடங்கி தென்னாசியாவரை கிட்டத்தட்ட மூன்று வருடங்களாகச் செய்கின்றனர்.

இவ்வாறு அவர்கள் தாம் வாழ்ந்த நகரத்தைவிட்டு விலகும்போது நண்பர்களிடம் விடைபெறுகின்றனர். அப்போது ஒரு நண்பர் மஞ்சள் அஞ்சலுறையைக் கொடுக்கின்றார். அதற்குள் பணமிருக்கின்றது. இந்த இணை அவர்களின் பயணத்தில் சந்திக்கும் மனிதர்களிடம் ஏதாவது வித்தியாசமாகக் காணும்போது, எந்த யோசனையுமில்லாது அதைக் கொடுக்கலாம் என்கின்றார் அந்த நண்பர். இப்படி மஞ்சள் கடித உறையில் இருக்கும் பணத்தைப் கொடுக்கும்போது அது குறித்து தனக்குத் தெரியப்படுத்த வேண்டியதில்லை எனவும் சொல்லப்படுகின்றது.

தென்னமெரிக்காவில் பயணிக்கும்போது, இந்த இணையின் பெண்ணுக்கு அவரது வாழ்வு குறித்த தேடல் குறுக்கிடுகின்றது. என்னவாக தான் ஆக விரும்புகின்றார் என்பதில் குழப்பங்கள் ஏற்படுகின்றன. இருபதுகளில் துணையைக் கண்டுபிடித்து, இப்போது முப்பதுகளில் இருக்கும் கிம் உலகத்தைத் தன்னியல்பில் பார்க்க முடியாது இருப்பதற்கு அவரது கணவன் பிரையனே காரணமென நினைக்கின்றார். ஆகவே, அவர்கள் உறவு சிக்கலாகின்றது.

தென்னமெரிக்காவிலிருந்து ஜேர்மனியைப் பார்த்து, இந்தியா செல்லும்போது, கிம்மும் பிரையனும் தனித்தனியாகக் கொஞ்சக் காலம் இந்தியாவில் கழிப்போமெனத் தீர்மானிக்கின்றனர். கிம் பிற இரண்டு பெண்களோடு சேர்ந்து புனேயிலிருந்து கேரளாவுக்கு ஆட்டோ வாடகைக்கு எடுத்து ஓடிச் செல்கின்றார். கிட்டத்தட்ட 1500 மைல்கள் இருக்கும் பயணத்தில் பல்வேறுவகையான அனுபவங்களை அவர் சந்திக்கின்றார். ஒருவகையில் அது கிம் பிற பெண்களோடு தனித்துச் செய்யும் வீரதீரப் பயணம் எனச் சொல்லவேண்டும்.

பிரையனோ தனியே கொஞ்சக்காலம் வடக்கில் திரிந்துவிட்டு, கோவாவிற்குப் போய்ச் சேருகின்றார். கிம் தனது ஆட்டோப் பயணத்தில் மிக வறிய மக்களின் மிகத் தாராளமான மனதைப் பார்க்கின்றார். அது அவருக்குப் பல விடயங்களைத் திறக்கின்றன. மட்டுமில்லாது, இந்தத் தனிமை பிரையனைப் பற்றியும் பிரையனுடான உறவைப் பற்றியும் ஆறுதலாக இருந்து யோசிக்கவும் வைக்கின்றது.

இவ்வாறு தனிப்பட்ட உறவுச்சிக்கலுடன், எப்படி இந்த இணை அவர்களின் நண்பர் கொடுத்த 'மஞ்சள் கடித உறையை' எங்கே,யார் யாருக்குக் கொடுக்கின்றனர் என்பது இதில் சுவாரசியமாகச் சொல்லப்படுகின்றது. ஆட்டோவில் நெடும்பயணம் முடித்த கிம் கோவாவிற்குச் சென்று பிரையனோடு இணைந்துகொள்கின்றார். பின்னர் அவர்கள் இருவரும் நேபாளுக்குச் சென்று அன்னபூரணா சேர்க்கிட்டில் வாரக்கணக்கில் ஹைக்கிங் (hiking) செய்கின்றார்கள். அதனோடு அங்கே அவர்கள் செல்லும் புத்தமடலாயங்கள் பற்றி விவரிப்பும் அவர்கள் பெறும் அனுபவங்ககளும் மிகுந்த சுவாரசியமானவை.

அந்த கால்நடைப் பயணத்தை முடித்தபின், எழுந்தமானமாக முடிவெடுத்து இந்தோனேசியாவின் பாலிக்குப் போகின்றார்கள். முதலில் சுற்றுலாப் பயணிகள் நிறைந்திருக்கும் தீவிற்குச் சென்று அந்த அனுபவம் கசப்பாக மாறினாலும் பிறகு சுற்றுலாப்பயணிகள் குறைந்த இன்னொரு தீவில் தங்குகின்றனர். அது ஒரு அற்புதமான அனுபவமாக இவர்களுக்குள் விரிகின்றது. பாலிப் பயணத்தை முடித்தபின், வியட்னாமில் நூற்றுக்கணக்கான மைல்கள் சைக்கிளில் பயணிக்கின்றனர். ஒரு நாட்டை, நகரத்தைப் பார்க்க இரண்டு சில்லுகளும் மூன்று சில்லுகளுமே மிகச் சிறந்த சாதனங்கள் எனக் கிம் சொல்கின்றார்.

ஒருவகையில் கிம் இந்தியாவை முச்சக்கர வண்டியான ஆட்டோவாலும் நேபாளத்தை தனது இரண்டு கால்களாலும் வியட்நாமையை இரு சக்கரங்களுள்ள சைக்கிளாலும் சுற்றிப் பார்க்கின்றார்.

வியட்னாமிய சைக்கிள் பயணத்தை முடித்தபின் மெக்ஸிக்கோவில் சில மாதங்கள் தங்கவும் கிம்மின் பயணந் தொடங்கி மூன்று வருடங்கள் ஆகின்றன. இந்தப் பயணம் அவருக்கு பலவற்றைக் கற்றுக் கொடுத்ததோடு, வாழ்க்கையில் நழுவிப்போயிருக்கும் சந்தர்ப்பங்களையும் வேறொரு திசையில் இருந்து கொண்டு வந்து அவருக்குச் சேர்க்கின்றது.




இவர்களைப் போல இப்படி வருடக்கணக்கில் நீண்டகாலத்துக்குப் பயணம் செய்யவில்லை என்றாலும் சில மாதங்களாவது இப்படிப் பயணித்திருக்கின்றேன் என ஒருவகையில் சின்னச் சந்தோசம் எனக்குள் எட்டிப்பார்த்தது. என்றாவது ஒருகாலத்தில் backpacker ஆக உலகம் முழுவதும் அலைந்து திரிவதான ஒரு கனவை அவ்வளவு எளிதில் கைவிடத் தேவையில்லை என்கின்ற நம்பிக்கையையும் இந்த 'மஞ்சள் கடித உறை' தந்திருக்கிறது

## All over the map *by* Laura Fraser

'உலக வரைப்படம் எங்கும்' எனும் பயணப் புத்தகத்தை பத்திரிகையாளராக இருக்கும் 40 வயதான லோரா எழுதியிருக்கின்றார். தனித்திருக்கும் அவர், தனது வயதை ஒத்தமற்றவர்களைப் போல கணவன், பிள்ளை போன்ற உறவுகளுக்கு ஆசைப்பட்டு அதைத் தேடுகின்றதாய் இந்தப் பயண நூல் ஆரம்பிக்கின்றது. அவர் இதற்கு முன் அவரது முப்பதுகளில் விவாகரத்தாகி இத்தாலிக்குப் போய், அங்கு சந்திக்கும் பிரான்சு பேராசிரியருடன் வரும் காதலும் காமமும் உணவுவகைகள் பற்றியும் 'இத்தாலியன் விவகாரம்'(An Italian Affair) என்ற நூலில் எழுதியிருப்பார்.

'உலக வரைப்படம் எங்கும்' நூல் லோராவின் 40களில் தொடங்கினாலும் 45 வயதுக்கு அப்பாலும் அது நீண்டு செல்கின்றது. ஓரிடத்திலும் அமைதி காணமுடியாது ஒவ்வொரு இடமாக அலைந்துசென்று அங்கு நடப்பதை லோரா எழுதிக்கொண்டிருக்கின்றார்.



உண்மையில் இது பயண நூல் போலத் தோற்றம் அளித்தாலும் ஒரு மத்தியவயதுடைய பெண்ணின் தேடலும் அலைச்சலும் எனத் துணிந்து சொல்லலாம். அவர் தனது 45 வயதுக்கு வரும்போதோ ஒருவகையில் தனது நிம்மதியைக் கண்டடைகின்றார். எப்படியெனில், ஒரு குழந்தையைத் தன்னால் இயல்பாய் இனிப் பெறமுடியாது என்பதைத் தனது உடல் மாற்றங்களினூடாக விளங்கிக்கொள்வதுடன், அவரது 45ஆவது பிறந்தநாளின்போது, அதுவரை சில வருடங்களாக அவர் டேட்டிங் செய்துகொண்டிருக்கின்ற காதலன், லோறாவுடனான உறவை முறித்துக்கொள்கின்ற புள்ளிகளிலாகும்.

நாற்பதில் ஒரு ஆண் துணையைக் கண்டுபிடிக்கவேண்டும் என பதற்றங்களுடன் இருக்கின்ற லோரா பின்னர் 45ஆனபின், எவையெவை எப்போது நிகழுமோ அப்போது நிகழட்டுமென நினைக்கின்றார்.

இத்தாலி அவருக்குப் பிடித்த இடமென்றாலும் அங்கேதான் அவரது அழகிய காதல் பிரான்ஸுப் பேராசிரியருடன் நிகழ்ந்ததென்றாலும் பத்துவருடங்களுக்குப் பிறகு வேறொரு ப்றொஜக்ட்டுக்காய் ப்ளோரென்ஸ், ரோம் நேபிள்ஸ் என அலைகின்றார். ஆபிரிக்கா நாடுகளிலிருந்தும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் வேலைகளைப் பெற்றுத்தருகின்றோம் என வரவழைக்கப்படும் பெண்கள் பாலியல் தொழில் செய்ய இத்தாலியில் நிர்ப்பந்திக்கபபடுவதை லோரா ஆய்வு செய்து எழுத இத்தாலி போகின்றார்.

அந்தப் பெண்கள் கடந்து வாழ்ந்து வாழ்வையும் இப்போது அனுபவித்துக்கொண்டிருக்கும் துயரங்களையும் பார்க்கும்போது, லோராவிற்கு தனக்களிக்கப்பட்டிருக்கும் ஆசிர்வதிக்கப்பட்ட வாழ்வின் அருமை புரிகிறது. வயதாகின்றது என்பதால், ஆண் துணையைத் தேடுகின்ற தனது முயற்சி இவற்றுக்கு முன் எவ்வளவு அற்பமான சிறுவிடயம் எனப் புரிந்துகொள்கின்றார். இவ்வாறு, பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதிக்கொடுக்கும் நிமித்தம் பல்வேறு இடங்களுக்கு போகும்போது, பசுபிக் சமுத்திரத்தில் சமோகாவில் லோராவிற்கு ஒரு கொடும் நிகழ்வு நடக்கின்றது. அவர் அங்கே திருநங்கைகள் எப்படி வாழ்கின்றனர் என எழுதப்போகும்போது, ஒருநாள் மது அருந்தி, தன் வயமிழந்த வேளையில் ஒரு ஆணால் பாலியல் வன்புணர்வு செய்யப்படுகின்றார். அத்துடன் அவரது அந்த அழகிய தீவிற்கான பயணமே வேறு நிறத்தைப் பூசிக்கொள்கின்றது.

பாலியல் வன்முறைக்குள்ளாகும் எல்லாப் பெண்களையும் போல தனக்கு நிகழ்ந்ததை மூடிமறைக்கின்றார். தன்னில்தான் பிழை என்று தன்னைத்தானே குற்றஞ்சாட்டுகின்றார். அந்த



நிகழ்விலிருந்து அவருக்கு முற்றுமுழுதாக வெளியே வர பல வருடங்கள் எடுக்கின்றன. இப்படி ஒரு சம்பவம் நடந்ததாலும் அவர் விரும்பிய ஆண் துணை கிடைக்காததாலும் அவரால் தொடர்ந்து எதிலும் முழுக்கவனத்தையும் செலுத்த முடியாதிருக்கின்றது. அவர் சிறுவயதிலிருந்தே தன்னுடைய பெரு விருப்பென நினைக்கும் எழுத்தைக்கூட தொடரமுடியாது அல்லறுகின்றார்.

எனினும் பொறுமையாக இருக்கும்போது, காலம் எல்லோருக்கும் கனிந்து வரவே செய்கிறது. அந்தப் பொறுமை இல்லாதபோது இருப்பதை இன்னுமின்னும் சிக்கலாக்கி, அரிய விடயங்கள் வரும்போது, அதை மனமுவந்து ஏற்றுக்கொள்ளும் சந்தர்ப்பங்களையும் தவறவிட்டுவிடுகின்றோம்.

லோரா, மெக்ஸிக்கோவில் சான் மிகைல் டீ அலெண்டே நகருக்கு கிட்டத்தட்ட 35 வருடங்களுக்குப் பிறகு போகின்றார். அவர் பத்து வயதாக இருக்கும்போது அவரையும் அவரது சகோதரிகளையும் தாய் இந்த நகருக்குக் கோடைகாலத்தில் அழைத்துச் சென்று ஒரு மாதத்திற்கு மேலாகத் தங்க வைத்திருக்கின்றார். அவர் அங்கே தனது சிறிய வயது ஞாபகங்களைத் தேடுகின்றார். சிலவற்றைக் கண்டும் கொள்கின்றார்.

சான் மிகேல் டீ அலெண்டா - கலைகளையும் மாற்று வாழ்வையும் தேடுபவர்க்கு ஒரு சொர்க்கபுரியாக இருக்கின்றது. அதிலும் முக்கியமாய் பெண்களுக்கு. நாளாந்த வாழ்வில் சலிப்பையும் விவாகரத்துப் பெற்றவர்களும் புது வாழ்வைக் கட்டியெழுப்ப விரும்புகின்றவர்களும் இந்நகருக்கு வந்து கொண்டேயிருக்கின்றனர். லோரா அங்கே சந்திக்கும் பெண்கள் அவருக்கு திருமண வாழ்வு முக்கியமில்லை, வாழ்வதுதான் அருமையானது என தத்தமது வாழ்வினூடாகக் கற்றுக்கொடுக்கின்றனர்.

தனது ஆண்துணை இல்லாத வாழ்வை அல்லது இப்போது அது முக்கியமில்லையென நினைக்கும் லோரா இந்நகரில் ஒரு பழைய வீட்டை வாங்கி, தனக்கு விரும்பியவாறு திருத்தியமைக்கின்றார். அது சில வருடங்களை எடுத்துக்கொண்டாலும் ஈற்றில் அது ஒரு பெரும் மன அமைதியை லோராவிற்குக் கொடுக்கின்றது. பிறகு மெக்ஸிக்கோவிற்கும் அமெரிக்காவின் கலிபோர்ணியாவிற்குமென தனது வாழ்வை அமைத்துக்கொள்கின்றார்.

மெக்ஸிக்கோவிலிருக்கும்போது லோராவின் விவாகரத்து வாழ்வின் பின், அவரை ஒளியூட்டிய இத்தாலியில் சந்தித்த பிரான்சுப் பேராசிரியருக்கு நோயொன்று வந்திருப்பதை அறிகின்றார். லோரா தொலைபேசியில் அவரோடு பேசுகின்றபோது, இன்னமும் லோரா தனித்தே இருக்கின்றாரா எனக்




இருபது வருடங்களுக்கு முன் காதலையும் காமத்தையும் காட்டிய ஒருவர் முற்றுமுழுதாக இந்தப் பூமியிலிருந்து நீங்கிப்போகின்றார் என்பது எவ்வளவு துயரமானது. ஆனால், நாமெல்லோருமே ஒருநாள் இல்லாமற்போகின்றவர்கள் என்கின்ற வாழ்வின் நிலையாமை நம்மை இவ்வாறான துயரங்களிலிருந்து நம்மை உந்தித்தள்ளி மீதமுள்ள வாழ்வை வாழச் செய்கின்றது. ஒருவகையில் கடந்த காலத்தில் ஒருவரோடு இருந்த அழகியகாலத்துக்கு நன்றி செலுத்துவதாய் நிகழ்காலமோ எதிர்காலமோ தனக்கான தருணங்களைப்புதைத்துவைத்து நமக்காய்க் காத்திருக்கவும் கூடும் என்பதை லோராவின் இந்தப் பயண நூல் நமக்குத் தெரிவிக்கின்றது.

கேட்கின்றார். ஆம் எது எப்படி இந்தக்கணத்தில் இருக்கவேண்டுமோ அப்படியே இருக்கின்றேன் என்கின்றார்.

பின்னர் லோரா பாரிஸ் போகும்போது ஒருமுறை பேராசிரியரைச் சந்திக்கின்றார். அவர் நோய் முற்றி அவரின் கடைசிக்காலத்தில் இருக்கின்றார். பழைய நினைவுகள் இருவருக்குள்ளும் பீறிட, வாழ்வின் ஓட்டம்பற்றி ஒரு திகைப்பு வருகின்றது. பேராசிரியர், 'நாம் ஒருகாலம் அழகிய வாழ்வை வாழ்ந்தோம்' என்கிறார். லோரா விடைபெற்றுச் சென்ற சில வாரங்களில் பேராசிரியர் இறந்துபோவதுடன் இந்தப் பயணப் புத்தகம் முடிகின்றது.

பயணம் பற்றி எந்த நூலாயினும் அது பயணத்தை மட்டும் பேசுவதில்லை, பயணம் செய்யும் ஒவ்வொரு தனிமனிதர்களுடைய உள்மனத்தேடல்களையும் அல்லாடல்களையும் முன்வைக்கின்றது. ஒருவகையில் இதை வாசிக்கும்போது மெல்லிய துயரமும் மன அழுத்தமும் வருவதை லோராவைப் போல நம்மாலும் உணரமுடியும். அழகான ஒரு வாழ்வை, அதை இல்லாத சிக்கல்களால் தேவையில்லாது நிரப்பிக்கொண்டிருந்த ஒரு பெண், தனக்கான அமைதியை பயணங்களினூடாகக் கண்டடைவதை இந்நூலைவாசித்துமுடிக்கும்போதுநாம் அறிகின்றோம்.

டிசே தமிழன்**<elanko@rogers.com>**

(56ஆம் பக்கத் தொடர்ச்சி)



போல் இருந்தது. பெண்கள் பிரிவின் நான்காவது படுக்கைத் தொகுதியில் உம்மா அனுமதிக்கப்பட்டாள்.

நடைக்கூடத்தில் வண்டிச் சக்கரங்கள் உருளும் சத்தம் கேட்டுக் கொண்டேயிருந்தது. வெள்ளைக் கூடாரங்களில் உறங்குகின்ற பயணிகளைப் போல் மறைக்கப்பட்ட வெள்ளைத் துணிகளுக்கிடையே சில நோயாளிகள் படுத்துக்கிடந்தனர். இதயத்துடிப்பினை கவனிக்கின்ற இயந்திரங்களின் ஒலி மரணத்தின் நினைவுகளை அறிவிப்புச் செய்வதுபோல இருந்தன. உம்மாவுக்கு அளிக்கப்பட்டுக் கொண்டிருந்த சிகிச்சைகளின் தாக்கத்தினால் வாந்தியும் வயிற்றுப்போக்கும் அதிகரித்தது. ஒரு நூலினைப் பிரித்தால் சரசரவென பிரிந்து போகும் புடவையைப் போல உம்மாவின் உடல் இளைத்துவிட்டது.

இரவின் நடுநிசியில் உம்மாவின் கண்களில் நீர்த்திவலைகள் நிரம்பியிருந்தது. உம்மாவின் உடலில் ஏற்பட்டுள்ள உபாதையின் வேர் அவளது உள்ளத்தின் அடியாழம் வரை பரவி ஏதோவொரு இணை பிரியாத அன்பு ஒன்றிற்காக ஏங்குவது போல் தெரிந்தது. உம்மாவின் முகத்தில் படிந்திருக்கும் வேதனைகளையும் சோகங்களையும் பார்த்த இவளுக்கு எலும்புக் குருத்துக்கள் எல்லாம் உறைந்துவிட்டன. உம்மாவின் கைகளினை பிடித்துக்கொண்டு உறக்கத்திற்கும் விழிப்புக்குமிடையில் ஊஞ்சலாடி விழுகின்ற தலையுடன் இரவிரவாக விழித்திருந்தாள்.

சில வேளைகளில் நோயின் களைப்பில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கும் உம்மாவினைப் பார்க்கும்பொழுது ஏதாவது விபரீதம் நடந்துவிட்டது போல்நெஞ்சு பதைக்க உற்று நோக்குவாள். வயிற்றுக்குள் பயத்தின் அமிலம் சுரக்கும். மூக்கின் அடியில் கைகளை வைத்து பின்னர் அமைதி அடைவாள். ஹீமோதிரபி பாய்ச்சுவதற்காக உம்மாவின் உடலில் ஊசி ஏறும் பொழுது பற்கடிப்பை மீறி அவளுக்குள் விம்மல் வெடிக்கும். ஒவ்வொரு வைத்தியப் பரிசோதனைக்கும் உம்மாவினை கதிரை வண்டியில் வைத்து தள்ளிக்கொண்டு திரிந்ததில் அவளது உடலின் அங்கங்கள் நூலில் கட்டப்பட்டிருந்த துண்டங்கள் போல் வெவ்வேறாக ஆடிக் கொண்டிருந்தன. இருப்பினும் உம்மா மீண்டு எழும்ப வேண்டும் என்ற மன உறுதி மட்டும் தேக்கு மரத்தைக் காட்டிலும் பலமாக இருந்தது.

வாழ்வா சாவா என்ற அந்த ஒரு மாத கால போராட்டத்தில் வெற்றி எனும் பாதைக்கு உம்மா குலுக்கல் முறையில் தெரிவு செய்யப்பட்டாள். "நீங்க குணமடைந்து விட்டீங்க, உடலிலிருந்த கென்ஸரின் கிருமிகள் எல்லாம் அழிக்கப்பட்டு விட்டன. இனி மூன்று மாதத்திற்கு ஒரு தடவை கிளினிக் வந்தா போதும்" என்று டொக்டரின் வாயிலிருந்து வந்த வார்த்தைகளில் அவளது மனம் நனைந்தது. "நாளைக்கு நாம ஊட்ட போகப் போறம்" என்ற நற்செய்தியை உம்மாவிடம் கூறும்பொழுதே வெள்ளை நிற தாமரையைப் போல் அவளது முகம் விகசித்தது. அன்று பிறந்த குழந்தையை அள்ளியெடுத்து கொஞ்சுவது போல் உம்மாவினது உச்சியை முகர்ந்தாள். உம்மாவின் கைகள் இரண்டினையும் சேர்த்து நெஞ்சோடு அணைத்துக்கொண்டாள். அந்தச் செய்தியைக் கேட்டபொழுது பட்டுப்போன ஒரு மரத்திலிருந்து பச்சை தளிர்கள் துளிர்ப்பது போல் உம்மாவின் முகம் பிரகாசித்தது. அந்த தகதகப்பு நிறைந்த கனத்தில் உம்மாவின் உதடுகள் விரிகின்றன. கண்கள் எதையோ பேச முனைகின்றன. மாமரத்தடி ஊஞ்சலில் உம்மாவின் மடியில் அவள் தலையை சாய்த்து உம்மாவிடமிருந்து கதையை கேட்பதற்காக அவள் குழந்தையாக மாறியது போன்றது அந்தக் கணம். உம்மாவின் பார்வையில் நுரை நுரையாகப் பெருகியோடும் பாற்கடல். ஏதோ சொல்வதற்கு உம்மா தயாராகின்றாள். "அவசரமாக சொல்லுமா" என்ற பிடிவாதக் கண்கள் இவளிடம்.

"உன்னைப் படிப்பிச்சதற்கான பலன் இப்பதான் எனக்கு விளங்குது. ஒரு ஆம்புள புள்ள மாதிரி அங்கயும் இங்கயுமா ஓடி ஓடி என்னால எவ்வளவு கஸ்டப்பட்டுட்டாய்."

திடீரென்று அவளது தொண்டைக் குழியில் அடைக்க கள்ளிப் பால் அருந்திய மாதிரி அவளது மூச்சுத் திணறியது. கால்கள் நடுங்கின. வாயிலிருந்து வார்த்தைகள் வெளியேற முடியாமல் கலவரம் செய்தன. திடீரென்று திருக்கை மீன் வால் அவள் எதிரே தோன்றியது. நாகம் போன்று அலை அலையாய் படமெடுத்தது.

"உம்மா நான் எந்தவொரு ஒப்பீடுமற்ற பெண். சுழித்து ஓடும் நதியில் எதிர்த்து நீந்துபவள். எனது உடல் எனது பெண்மையின் வலிமையிலிருந்து பிறப்பிக்கப்பட்ட திரட்சி. எனது இந்த அதீத விசையை உனக்கு நிரூபிப்பதற்கு எத்தனை தடவை போராடினேன். எனது உடற்கூற்றினை இன்னுமா நீ புரிந்துகொள்ளவில்லை? எனக்கு வலிக்கிறது, எனது ஒவ்வொரு அங்கமும் உடைந்து நொறுங்குகின்றது! நீ என்னை ஆண் என்ற உடற்கூற்றுக்குள் வைத்து ஒப்பீடு செய்யும் பொழுது திருக்கை மீன் வாலினால் எனது உடலின் மேல் ஓங்கி அடித்து தோல் உரிந்து இரத்தம் பீரிட்டு எழுவது போல் நான் உணர்கின்றேன்."

கண்ணீர் ஒன்று திரண்டு அவள் கண்களுக்குள் ஒரு சமுத்திரம் பிரவகித்துவரத் தயாராகிக் கொண்டிருந்தது. அச்சமுத்திரத்தைத் தடுப்பதற்காக கண்களை இறுக மூடி உறைந்து கொண்டிருந்தாள். ●

# டால்பின்கள்

ராம் முரளி
ஓவியம்: Laxman Aelay



இருள் மெல்ல அவிழ்ந்துக் கொண்டிருந்தது. முழு நகரின் மீதும் அகலமான அடர்ந்த கருப்பு போர்வையொன்றை விரித்தாற்போல, வெளிச்சம் சிறிது சிறிதாக கரைந்து, இருள் பரவி வியாபித்திருந்தது. மனித சலனம் குவிந்த அந்த பாதையின் ஓரத்தில் ரகுபதி அவரது மகள் வயிற்று பேரனான குணாவை தனது முதுகின் மீது ஏற்றிக்கொண்டு, விமான ஓடு தளத்தையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தார். அவருக்கு அருகில் இருபுறமும் பலர், கண்கள் விரிய, தொலைவில் சிறு பறவைப்போல நிலம் நோக்கி தனது றெக்கை அகல திறந்த நிலையில் இறங்கியபடியிருந்த விமானத்தில் நிலையுற்றிருந்தார்கள். ரகுபதிக்கும் விமான ஓடுதளத்திற்கும் இடையில் சிறிய காம்பவுண்ட் சுவர் எழுப்பப்பட்டிருந்தது. அதன் மீது முட்கம்பி சுருள்கள் படர்ந்து சுருண்டிருந்தன.

விமானத்தில் பயணிக்க வேண்டுமென்கின்ற விருப்பமெதுவும் ஒருபோதும் ரகுபதிக்கு அவரது வாழ்நாளில் இருந்ததில்லை. அவர் சைக்கிளை சரிவர ஓட்டி பயிலவே பல காலம் எடுத்துக்கொண்டார். பள்ளிக் காலங்களில் ஏனைய அனைத்து சிறுவர்களும் குரங்கு பெடல் அடித்து சைக்கிளின் இரும்பு பிணையை அணைத்துக்கொண்டு நகர்கையில், அவர் மட்டும் பொடி நடையாய் மண் பரவிய பாதையில் இறங்கி நடந்துச் செல்வார். சுவாச கோளாறினால் சிறுபிராயத்தில் இருந்தே அவதியுற்றிருந்த அவருக்கு, வாகனங்களில் பயணம் செய்கின்றபோது உடல் அதிர்ந்து குலுங்குவது உவப்பானதாக இருந்ததில்லை. ரகுபதி தன் வாழ்நாளில் சில முறைகள் பேருந்தில் பயணித்ததை தவிர, ஏனைய பிற வாகனங்கள் எதிலும் ஒருபோதும் ஏறியதில்லை.

கடைவீதியில் வாழை இலை வியாபாரம் செய்துவந்த குமார் அண்ணன்தான் அவரது தயக்கத்தை கலைத்து சைக்கிள் ஓட்ட பயிற்றுவித்தவர். அதற்குள் ரகுபதி கால்சட்டை வயதை கடந்து முழு நீள பேண்ட் அணிந்துக்கொண்டு ஊரில் திரியத் துவங்கியிருந்தார். ஆரம்பத்தில் கலக்கமாகத்தான் இருந்தது என்றாலும் குமார் அண்ணன் வெகு நிதானமாக ரகுபதியின் அச்சத்தை கலைத்து, அவரை சைக்கிளின் மீதேற்றி பறக்கவிட்டார்.

ஊரில் விமான நிலையம் திறக்கப்பட்டது கடந்த மாதத்தில்தான். இன்னமும் அதன் மீதான வியப்பு அவ்வூர் மக்களுக்கு தீர்ந்தபாடில்லை. மத்திய சர்க்காரின் எல்லைக்குட்பட்டிருந்த அப்பகுதியில், அவ்வப்போது அரசியல் பிரமுகர்கள் வருகை புரிந்து வருவதால், விமான தள ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பேரன் குணாவும் அவ்வப்போது ரகுபதியை விமானங்களை பார்க்க நச்சரித்து அழைத்துப் போக சொல்வான்.

செம்மண் பூத்த அவ்வெளியில் உயிர்பித்திருந்த முந்திரி வனங்களின் வேர்கள் அறுக்கப்பட்டு, விமானத்தின் ரப்பர் சக்கரங்கள் சறுக்கி ஓடுவதற்கு ஏற்றமுறையில் அந்த விமான நிலையம் உருவாக்கப்பட்டிருந்தது. ஊரில் எல்லோரும் அதிசயித்துப் போனார்கள். தங்கள் வீட்டு கூரையின் மீது விமானம் பறக்கிறது என்கின்ற எண்ணமே அவர்களை பெரு மகிழ்வில் ஆழ்த்தியது. கணத்துக்கு ஒருதரம் அதன் அரற்றலொலி அவர்களின் காதுகளை துளைத்தெடுத்தது. தங்களது தினசரி சந்தோஷங்களை காற்றிலேற்றி விமானத்துடன் பறக்கவிட்டிருந்தனர் அவ்வூர் மக்கள்.

ரகுபதி தனது மனதில் அழிவுறாமல் புகைந்துக் கொண்டிருக்கும் ஒரு காலக்கட்டத்தின் நினைவுகளை விமானங்களின் அசைவு சுமந்து கொண்டிருப்பதாக கருதி வந்தார். விமானத்தை அவர் முன் காலங்களில், சென்னை போய் வந்துக்கொண்டிருந்த தினங்களில் பார்த்ததுதான். மீனம்பாக்கம் விமான நிலையத்தின் பின்னாலிருக்கும் பொழிச்சல்லூரில் குடியிருந்த தனது அக்காவை சந்திக்க செல்கின்ற நேரங்களில் தொலைவில் தெரியும் விமான ஓடுதளத்தை பரவசம் பெருக பார்த்துக்கொண்டு நிற்பார். அவை அவருக்கு பயணத்துக்கு உகந்த வாகனமாக ஒருபோதும் தென்பட்டதில்லை. மொழுமொழுவென்றிருந்த அந்த முன் முனை அவருக்குள் டால்பின் மீன்களை நினைவுப்படுத்துவதாக இருந்தது.

அந்நாளில் தூர்தஷனில் எப்போதாவது விலங்குகளின் பண்புகளை விளக்கும் நிகழ்ச்சிகளை தொகுத்துவழங்குவார்கள். அப்போதுப் பார்த்ததுதான் டால்பின்களை. பந்துகளை மூக்கின் நுனியில் புரட்டியெடுத்துக்கொண்டு பாதி உடலை நீரினுள்ளும் மீதி உடலை நிலத்தின் மீதும் சாய்த்தும் உலவும் அதன் வழுவழுப்பான பாசியுடலை நினைவுப்படுத்தும் வான்வெளி டால்பினாகவே அவர் விமானங்களை கருதி மகிழ்ந்தார்.

விளையாட்டு பொம்மைகளை தரையில் இரைத்து வைத்தாற்போல, நிலையமெங்கும் குவித்து நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் விமானங்கள் பொழிச்சல்லூரின் ஆண்கள் படித்துறையின் கரையிலிருந்து பார்க்கும்

ரகுபதியின் கண்களுக்கு புலனாகும். அவரது அக்காள் அவ்வூருக்கு தனது பதின்ம வயதுகளில் சாதியில் பின்தங்கிய நிலையிலிருந்த ஒருவனை இழுத்துக்கொண்டு வந்து குடி சாத்தினாள். பல வருடங்களுக்கு அவள் எங்கிருக்கிறாள் என்பதே அவளது குடும்பத்துக்கு தெரியாமல் இருந்தது. துவக்க தினங்களில், எல்லோரும் அவள் வடமாநிலங்களில் ஏதேனுமொன்றில் குடிபுகுந்துவிட்டாள் என்று கருதி வந்தார்கள். பம்பாயின் மல்லாட் பகுதியில் அவள் வசிக்கக்கூடும்என்பதுசிலரது அனுமானமாகஇருந்தது. சிலர் அவள் ரகசியமாக கொலையுண்டுவிட்டாள் எனவும் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

ரகுபதியின் தந்தையான முனுசாமிக்கு மகனைவிட மகள் இனியவள் மீதுதான் கொள்ளை பிரியம். பிற பிற நகரங்களுக்கு துணி வியாபாரம் செய்வதில் தனது பெரும்பகுதி வாழ்க்கையை செலவிட்டிருந்த அந்த மனிதர், வீட்டில் தங்குகின்ற நேரம் முழுவதிலும் தனது மகளை அருகில் வைத்துக் கொண்டிருக்கவே விரும்புவார். இனியவளின் தலை அசைப்பு, இடுங்கி சிரிக்கும் கண்கள், கைகளை ஆகாயமென விரித்து அவள் சொல்லும் கதைகள் என ரகுபதியின் தந்தை தனது பால்யத்தின் மீட்சியாகவே அவரது மகளின் சிறுசிறு விளையாட்டுகளில் தானும் பங்கேற்பதன் மூலமாக மனம் லயித்துக் கிடந்தார்.

ஒருமுறை, பின் மதியபொழுதில் அவரும் மகளுமாக குளத்திற்கு குளிக்கச் சென்றிருந்தார்கள். கரையின் மீது அவளை இருக்கச் செய்துவிட்டு, முனுசாமி ஓரோரமாக குழுமியிருந்த ஆண்களுடன் சேர்ந்துக்கொண்டு கதை பேசியபடியே நீர் மொண்டு குளித்து கொண்டிருந்தார். இனியவளுக்கு நீரில் அசையும் நட்சத்திரங்களைப்போல குவியல் குவியலாக வளைந்து நீந்தும் மீன்களின் மீது பெரும் பரவசம் துளிர்த்தது. அவள் தனது மிருதுவான சிறிய விரல்களை நீரினுள் ஒவ்வொன்றாக இறக்கினாள். மீன்கள் மெல்ல அவளது விரல்களை நெருங்கி வந்து முத்தமிட்டு விலகி மறுபடியும் நீரினுள் அமிழ்ந்து மறைந்தன. நீர்ம பரப்பின் மேலுடலில் இனியவளுக்கும் மீன் குழுவுக்கும் இடையிலொரு விளையாட்டு நடந்தது. அவளின் உடல் சிலிர்த்துக்கொண்டது. பரவசத்தில் நெளிந்த உடலில் உண்டாகிய நொடி அதிர்வில் இருந்து மீள்வதற்குள், முழு மீன்களும் ஒன்றுதிரண்டு அவளை உள்ளிழுக்கப்பதைப்போல, சடாரென்று நிதானம் குலைந்து பாசி படர்ந்த பாறையின் விளிம்பில் இருந்து கால்கள் வழுக்கி நீரில் தொப்பென்று விழுந்துவிட்டாள்.

தொலைவில் குளியலாடிக் கொண்டிருந்த முனுசாமி உள்பட அனைவரின் காதுகளிலும் நீரின் மீது கனத்த ஏதோவொன்று விழுந்துவிட்டதென்கின்ற உணர்வு எழுந்ததே ஒழிய, சிறுமியின் நினைவு முதலில் உருவாகவில்லை. ரகுபதியின் தந்தை மெல்ல எவ்வித சந்தேகமுமின்றி பாறையின் மீது கண்களை மேயவிட, அங்கு அவள் இல்லாததால், லேசான பதற்றமெழுந்து, கண்களை நிரைத்திருந்த சோப்பு நுரையை வழித்துக்கொண்டார். அப்போதுதான் அந்த ஆண் கூட்டம் மொத்தமும் நீரின் மீது எழுந்தெழுந்து மறைந்துக் கொண்டிருந்த சிறுமியின் உயிர் போராட்டத்தை கண்ணுற்று துணுக்குற்றது. நீச்சல்



புரிவதில் பரீட்சயமற்ற அவளது தந்தையோ, நீரில் புரள்வது தனது மகளேதான் என்பதை உணர்ந்ததும் தரையில் சரிந்து வேதனையில் துடிதுடித்து அழ ஆரம்பித்துவிட்டார்.

எங்கும் பதற்ற சூழல் நிலைகொண்டிருந்தது. ஓரிரு ஆண்கள் குளத்தில் குதித்து அந்த சிறுமியின் பக்கமாக நீச்சலடித்தனர். முன் காலங்களில் பல உயிர்களை விழுங்கியிருக்கும் அந்த அய்யனார் குளம் எவ்வித சிடுக்குளோ, போராட்டமோயின்றி நிதானமாக, மனித இருப்பை துளியும் பொருட்படுத்தாமல், சிறுமியின் உயிரை புசிக்கும் செயலில் பேரமைதியுடன் ஈடுபட்டிருந்தது. உயிர் போராட்டம் சில நிமிடங்கள் நீண்டு முனுசாமியின் மனதில் பெரும் வலியையும் அலறலையும் தோற்றுவித்திருந்தது. அதற்குள் சிறுமியின் துடிப்பு வேகம் குறையத் துவங்கியிருந்தது. அவளை நெருங்கி, தோளின் மீது சுமந்து வந்து கரைச் சேர்ப்பதற்குள் குளத்தை சுற்றி மொத்த ஊரும் திரண்டுவிட்டது.

ரகுபதி அந்த கூட்டத்தினடையில் தனது தந்தையின் உடலைப் பிடித்தபடி தரையில் முழங்காலிட்டு அமர்ந்திருக்க, அவனது கண்களில் இருந்து கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது. தனது மேற்சட்டையை கையில் இழுத்துப் பிடித்து கண்களை துடைத்துக்கொண்டான். அவனது கண்களில் துலங்க துலங்க நீர் ஊற்று பெருகி உருண்டபடியே இருந்தது.

இனியவளின் உடல் நிலத்தின் மீது சாய்க்கப்பட்டு, அவள் அருந்தியிருந்த குளத்து நீரை வெளியேற்றும் வேலையில் எல்லோரும் ஈடுபட்டிருந்தார்கள். ரகுபதியும் தந்தையும் அவளை அந்த கோலத்தில் காணவே திடுக்கிட்டுப்போயிருந்தார்கள். சிறிதுசிறிதாக நீரை துப்பிவிட்டு, புத்துயிர்ப்பு பெற்றவளாக கண்கள் விழித்து, அப்பா என்கையில், அவளது தந்தை, "என்

ராசாத்தி..” என்று வாரி அணைத்துக்கொண்டு அந்த குளத்து கரையில் இருந்து விரைந்து நகர்ந்தவர்தான், அதற்குபிறகு அவர், ஒருபோதும் அய்யனார் குளத்தின் திசையில் திரும்பியதேயில்லை.

முனுசாமி அதன்பிறகு, தனது மகளை மேலும் அதீத கவனிப்புடன் வளர்க்கத் துவங்கினார். அவளது ஒவ்வொரு அசைவையும் கவனிக்கத் துவங்கியிருந்தார். தான் அதுநாள் வரையிலும் பார்த்து வந்த துணி வியாபாரத்தை கைக்கழுவிவிட்டு, உள்ளூரில் இருந்த பைனான்ஸ் கம்பெனி ஒன்றில் நிதி வசூலிப்பாளராக வேலையில் சேர்ந்துக்கொண்டார். மகளின் நெருக்கத்தில் இருப்பது அவருக்கு உவப்பளிப்பதாக இருந்தது. 'மரண பிரதேசம் வரையிலும் சென்று மீண்டு வந்திருக்கும் அவளது இரண்டாம் பிறப்பிது' எனச் சொல்லி சொல்லியே அவளை மனதிற்குள் தானொரு அபூர்வ உயிரி என்கின்ற எண்ணத்தை உண்டாகியிருந்தார். அந்த நினைப்பே அவளை முற்றிலும் எதிர்பாராத வேறொரு சாகசச் செயலுக்குள் இழுத்துச் சென்றது. பெண்மை திரள்வு கொண்டிருந்த பருவத்தில் அவள் தன்னையொரு ஆண் உருவென்றே பாவித்து பல செயல்களை தன்னிச்சையாக எவ்வித உள பதற்றமுமின்றி எடுக்க ஆரம்பித்தாள்.

ஊரில் அக்காலத்தில் மிக வன்மமான முறையில் சாதி படுகொலை ஒன்று நிகழ்ந்திருந்தது. சாதிக் கோடுகளை தங்களது ஆசையின் விபரீதத்தாலும், ஊர் நூலகத்தின் இருண்ட அறை இடுக்கில் தனது வெண் தாடியை படரவிட்டிருந்த பெரியாரின் எழுத்து ஏடுகளின் பரீட்சயத்தாலும், கடந்திருந்த இளம் வயதினுடைய ஆண் பெண் இருவரை, ஊரின் பெருசுகள் சேர்ந்து பழிதீர்த்தனர். பழம் பெருமிதங்களில் ஊறிக்கிடந்த அவர்கள் துளி கருணையோ துளி நேயமோ இல்லாமல், சிவன் கோவில் படித்துறையில் வைத்து இருவரையும் பார்த்த தினத்திலிருந்தே அவர்களைப் பழித்தீர்க்க துடியாய் துடித்துக் கொண்டிருந்தார்கள்.

அக்காலத்தில்தான் 'பெரியார் அறிவொலி மன்றம்' ஊரில் துவங்கி செயல்பட ஆரம்பித்திருந்தது. பல்வேறு கூட்டங்களும் அவ்வப்போது ஊரில் நிகழ்ந்துக் கொண்டிருந்தன. சாதியின் பெயரில் நிகழும் படுகொலைகளை அவ்வியக்கம் மிக கடுமையாக சாடி கொண்டிருந்தது. ஏராளமான ஒடுக்குமுறைகளை பட்டியலிடப்பட்டது. பெரியாரிய கருத்துகள் பகிரப்பட்டன. கறுப்பு சட்டை என்பது ஊர் இளைஞர்களில் பெருவாரியானவர்களின் நிரந்தர ஆடையாகவே ஆகியிருந்தது. இவர்களுக்கு மத்தியில்தான் பெருசுகள் தங்களது சாதியத்தை காப்பாற்ற துடிதுடித்துக் கொண்டிருந்தார்கள். 'சாத்தான்கள்' என்ற பழிப்புரைகளும் இளைஞர்களுக்கு எதிராக வீசப்பட்டன.

காதல் புரிந்துக்கொண்டிருந்த இளசுகளின் வீட்டு வாசலில் சாதி காப்பாளர்களின் நிழல்கள் ஊர்ந்து அலைந்தன. அவர்களது பெற்றோர்களிடம் எடுத்து பேசியும் அவர்களால் காதல் பிணைப்பை துண்டித்தெறிய இயலாமல் போனது. பிற ஊர்களுக்கு மத்தியில் தமது கௌரவம் மெல்ல மெல்ல மண்டியிட்டுக் கொண்டிருப்பதாகவும் கருதத் துவங்கினார். கறுப்பு உருதிரட்சையென திரண்டிருந்த அறிவொலி அமைப்பை கலைக்கவியலாத பெருசுகள், ஒரு தடாலடியான முடிவால் தாங்களும் அவர்களுக்கு சளைத்தவர்களில்லை என்பதை நிறுவ முனைப்புகொண்டிருந்தனர். வன்மம் அவர்களின் முகங்களில் நிழல்களைப்போல திரண்டு, இறுக்கமாய் நிரந்தரமாய் படிந்துப்போயிருந்தது. நாளாக நாளாக இளசுகளின் உறவாடலும் சிரிப்பொலிகளும் ஊரில் எங்கும் பேச்சாய் வளர்ந்துக்கொண்டிருக்க சாதி மூளை மேலும்மேலும் கூர்மையுற்றபடியே இருந்தது. எனினும் அவசரகதியில் எதுவும் புரிந்து பெரும் கலவரத்தை கிளர்த்தி விடவும் அவர்கள் தயாராய் இல்லை. தங்களுக்கான தினத்தை எதிர்நோக்கி பொய் சிரிப்புடன் ஊரில் உலா வந்துக்கொண்டிருந்தார்கள் பெருசுகள்.

பங்குனி மாத உத்திர திருவிழா அவர்களுக்கு ஒரு நல்வாய்ப்பை உருவாக்கி தந்தது. திருவிழா துவங்குவதற்கு ஓரிரு தினங்களுக்கு முன்பிருந்தே ஜெகஜோதியாய் ஊரில் மின்கம்பங்கள் வண்ண வெளிச்சங்களை சிதறவிட்டிருந்தன. எங்கும் ஆராவாரம் பெருகியிருந்தது. ஊர் முழுமைக்கும் திருவிழா பொழுதுகளில் மனம் சொக்கிப் போயிருந்தது. இடைவிடாமல் பக்தி பாடல்கள் ஒலிபரப்பு செய்யப்பட்டன. ஒருபுறம் அன்னதான பந்தல்கள் ஊன்றும் பணியும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. 'பெரியார் அறிவொலி மன்றம்' சார்பாகவும் அன்னதான பந்தல் அமைக்கும் பணி நடைபெற்றது. மன்ற உறுப்பினர் சேர்ப்பு தாள்கள் அச்சிடப்பட்டிருந்தன. சிறு சிறு புத்தகங்களும் விற்பனைக்கு தயாராகிக் கொண்டிருந்தது. பதினைந்துக்கும் மேற்பட்ட மன்ற உறுப்பினர்கள் இணைந்து செயல்பட்டார்கள். காதல் கதையில் கிசுகிசுக்கப்பட்டிருந்த இளைஞனும் அவர்களில் ஒருவன்.

அந்த இராப் பொழுதில், தொலைவில் ஒலித்துக்கொண்டிருந்த திருவிழா பாடல்களுக்கு விசிலொலிகளை பறக்கவிட்டு, பந்தல் கழிகளையும் நிலத்தில் ஊன்றிவிட்டு, கதைகள் சிலவும் பேசிவிட்டு உடல் அயர்ச்சியுற்று அவ்விடத்தில் இருந்து தனது பைக்கில் கிளம்பிய அந்த இளைஞன், அன்றிரவு வீடு போய்சேர்ந்திருக்கவில்லை. பெருத்த ஜனக்கூட்டத்தின் இடையில் நுழைந்திருந்த அவனது இருப்பு திடீரென புகையுருவில் மாயமாய் மறைந்துப்போயிருந்தது.

சங்கதி புரிபடுவதற்குள் காலம் தாழ்ந்துவிட்டது. முதலில் குடும்பத்திலும் பின்னர் ஊர் முழுமைக்கும் பதற்றம் தொற்றி வளர்ந்தபடி இருந்தது. நேரம் கூடிக்கொண்டே போனதே ஒழிய இளைஞனின் வருகை அதன்பிறகு நிகழவேயில்லை. இதனால், உத்திர திருவிழா இரவு ஊரில் பெருத்த அலறல்களை தோற்றுவித்திருந்தது. காணாமலாகிய இளைஞனை தேடும் செயலில் பலரும் இறங்கியிருந்தார்கள். முனுசாமியும்கூட பேச்சுவாக்கில் பெருசுகளிடம் விசாரித்துப் பார்த்தார். பல்வேறு யூகங்களும் முன்மொழியப்பட்டன. எனினும் எந்தவொரு கண்களுக்கும் புலனாகாமல் இந்த இளைஞன் அவ்வூரில் இருந்து தொலைந்துப்போயிருந்தான். நாட்கள் சில நகர்ந்த பின்னர்தான், திருவிழா சமயத்தில் வல்லம்படுகை ஆட்கள் ஊரில் இறங்கியிருந்ததாகவும் இரவோடு இரவாக, காரில் வைத்து அவனைக் கடத்திச்

சென்று மணல்வெளி ஒன்றில் உயிரறுத்து கொலைச் செய்து புதைத்துவிட்டதாகவும் உறுதியற்ற செய்திகள் அரசல்புரசலாக கசியத் துவங்கின. அந்த பெண்ணும் தலைவிரிகோலமாய் மாரில் அடித்துக்கொண்டு மண் தரையில் பிரண்டு அழுதாள்.

ஊரிலெங்கும் கிலிப் பிடித்திருந்தது. எல்லோரும் நிகழ்ந்து முடிந்த இச்சம்பவத்தின் அதிர்வுகளில் இருந்து மீள முடியாமல் இருந்தனர். பல தினங்களுக்கு ஊராரின் காதுகளில் இந்த காதலும் அதன் குருதி படர்ந்த இறுதி கணங்களுமே பேச்சாய் ஆகிவிட்டிருந்தது. இனியவளுக்கும் இச்சம்பவம் தொடர்பாக சில அபிப்ராயங்கள் கிளைத்திருந்தன. முன்பே சிறியளவில் அறிமுகமாகியிருந்த கொலைச் செய்யப்பட்டவனின் வீட்டினரிடத்தில் அதிகம் நெருக்கம் பாராட்டத் துவங்கினாள். கொலையுண்டவனின் தம்பியின் மீது நெகிழ்வு கூடிக்கொண்டேப்போனது. ஒருபுறம் வழக்கு வாதமென இழுத்துக்கொண்டே போக, கோரச் சம்பவத்தின் அதிர்வுகளில் இருந்து மீளும் திசை அறியாமல் வதங்கியிருந்த குடும்பத்திற்குள் நாள்போக்கில் அவள் சிறு வெளிச்சக் கீற்றை பிண்ணத் துவங்கியிருந்தாள்.

மெல்ல மெல்ல கொலையுண்டவனின் தம்பிக்கும் அவளுக்குமான நெருக்கம் அதீதமாகிக்கொண்டேபோனது. அந்த குடும்பத்தாரும் இனியவளின் செயல்களில் இணக்கம் கூடுவதை உணர்ந்துகொண்டார்கள். முன்பே ஒரு சாதி படுகொலையை எதிர்கொண்டிருக்கும் குடும்பத்தில் எஞ்சியிருக்கும் ஒற்றை ஆண்பிள்ளையையும் அவர்கள் தாரைவார்க்கதயாராய் இல்லை. அதனால், நிதானமாக எடுத்துச் சொல்லி அவளை தங்கள் வீட்டிற்குள் வரவேண்டாமென்று நாசூக்காகத் தெரிவித்தனர். அன்பின் பெரு வனத்தில் தனது கூட்டினை சிறுக சிறுக சேமித்த நேசத்தை கொண்டு கட்டியெழுப்பும் ஒருத்தியிடம் அந்த கூட்டினை கலைக்க சொன்னால், அதற்கு அவள் எப்படி ஒத்திசைவாள்? முரண் நிகழ்ந்தது.

அன்றிலிருந்து சில தினங்களுக்குள் அவர்கள் இருவரும் ஊரில் இருந்து இரவோடிரவாக ஓடிப்போனார்கள். ஊரில் ரகுபதியின் குடும்பத்துக்கு பெரும் தலைகுனிவாகிப் போய்விட்டது. சிலர் அவள் கொலைச் செய்யப்பட்டுவிட்டதாகவும் தகவல் தெரி வித்து, ரகுபதியின் குடும்பத்தின் மனப் பதற்றத்தை கூட்டுவதன் மூலமாக, தங்களது சாதி திமிரை மேலும் மேலும் வாஞ்சையுடன் ஊன்றிக் கொண்டிருந்தார்கள். ரகுபதியின் குடும்பத்தில் அனைவரும் ஒருவர் மற்றவருக்கு தெரியாமல் ரகசியமாக அழுதுத் தீர்த்தனர். தன் தோல்களின் மீதேற்றி தெருத்தெருவாக சுற்றியலைந்த ரகுபதியின் தந்தை முனுசாமி அவள் உயிர் குறித்த ரகசியத்தை தன் வாழ்நாளின் இறுதிகாலம் வரையிலும் அறியாமலேயே ஒரு மழைக்காலத்தில் மரணமுற்றார்.

காலங்களில் ரகுபதி தனது அக்காளை நினைவில் இருந்து தொலைத்தேவிட்டிருந்தார். உள்ளூரில் மணமுடித்துஹோட்டல் ஒன்றையும் நடத்திக்கொண்டு, தன் போக்கில் வாழ்ந்துக் கொண்டிருந்தார். பொஞ்சாதி எனும் புது உறவு அவரது வாழ்வின் இடைவெளிகளை நிரப்பியிருந்தது. மகளும் பிறந்து ஊர் முழுக்க பலூன்களை பறக்கவிட்டுக் கொண்டிருந்தாள். குடும்பஸ்தராக தன்னை உணர துவங்கியிருந்த ரகுபதி பிற ஊர் நிகழ்வுகள் எதிலும் தன்னை பிணைத்துக்கொள்ளாதவராக மாறிப்போயிருந்தார். எனினும் பல வருடங்களுக்கு பிறகு எதிர்பாராத வகையில் முகவரி குறிக்கப்படாத இன்லாண்ட் கடிதமொன்று அவர் கைக்கு வந்துச் சேர்ந்தது. இனியவள் தன் கைப்பட எழுதியிருந்த அக்கடிதத்தில், தான் நல்ல நிலையில் வாழ்க்கை நடத்துவதாகவும் தனது உயிர் போய்விட்டதென்ற நினைப்பை கலைக்கும்படியும் வலியுறுத்தி எழுதியிருந்தாள். ரகுபதி அந்த கடித சொற்களின் மீது கண்ணீர் சாத்தி அழுது வடித்தார். அவரால், தனது அக்காள் உயிருடன் இருக்கிறாள் என்பதையே முதலில் நம்ப இயலாமல் இருந்தது.

அவசரகதியில், மறுநாளே பஸ்ஸை பிடித்தவர் சென்னையில் வந்து இறங்கி, இன்லாண்ட் கடிதத்தில் பொறிக்கப்பட்ட தபால் நிலைய அச்சு குறிப்பை வைத்து புறநகர் பகுதிகளில் சுற்றியலைந்தார். பின்னர் பம்மல் தபால் நிலையத்தில் ஊழியம் பார்க்கும் தபால்காரர் ஒருவரின் மூலமாக அந்த கடித சொற்களின் சொந்தக்காரியான அக்காளின் வசிப்பிடத்தை அறிந்துக்கொண்டு நகர்ந்துச் சென்றார்.

சிற்றுடலாக தன் மடியில் கிடந்த ரகுபதியை மீசை தழைத்து வளர்ந்த நிலையில் பார்த்தவுடன் அக்காளுக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்துவிட்டது. ரகுபதிக்கோ தங்களுக்கிடையில் உரிந்து மறைந்திருக்கும் காலங்களின் பருண்மையை உடலில் ஏற்றியிருக்கும் அக்காளின் நிலைப் பார்த்து கண்கள் வெறித்தன. இருவரும் அன்றைய தினத்தில் முகம் வெடிக்க அழுதுக்கொண்டே இருந்தார்கள். காலத்தில் அழிவுற்ற மரணமொன்றின் மணல்மேட்டை சுற்றி துளிர்க்கும் ஈரிலைகளைப்போல, அவளது மீள் வருகை ரகுபதியின் மனதை ஈரப்படுத்தி குளிர்பித்தது. தாங்கள் தொலைத்துவிட்டிருந்த தினங்களின் நிகழ்வுகளை அன்றைய இரவில் இருவரும் பரஸ்பரம் பகிர்ந்துக்கொண்டார்கள். தந்தையின் மரண நிகழ்வு இனியவளை வெகுவாக பாதித்துவிட்டது. அதன்பிறகு, அக்காளை தொடர்ச்சியாக சமயம் வாய்க்கும்போதெல்லாம் ரகுபதி சந்திக்க வருவது வாடிக்கையாகிபோனது. மீண்டுமொரு நிலா காலம் அவர்களது வாழ்க்கையில் துவங்கியிருந்தது. அக்காள் தனது காலத்தில் எவ்வித புகார்களும் இல்லாமல் மனமகிழ்வுடன் வாழ்ந்து கொண்டிருந்தாள்.

இப்போது இவையெல்லாம் பழங்கதைகளாகி விட்டன. ரகுபதிக்கே இன்றைய தினத்தில் ஐம்பதின் இடைப்பட்ட வயது. தலைகேசத்தில் வெண்மை படிந்திருந்தது. தோளும் சுருங்கி, குள்ளமாக வலுவற்றிருந்தார். தனது வாழ்வு பாடுகள் எல்லாவற்றையும் பூர்த்திச் செய்துவிட்டு, அக்காள் குழிகண்டு இரண்டு வருடங்களாகின்றன. இயல்பான வெகு அமைதியான ஆர்ப்பாட்டமில்லாத



சாவு அவளுடையது. இரவு வழக்கம்போல, வாசல் கதவை தாழிட்டுவிட்டு வந்து படுத்தவள், ஆழ்ந்த கலைக்கவியலாத உறக்கத்தை இறுகப் பற்றிக்கொண்டுவிட்டாள். பிறகவளுக்கு விழிப்பெதுவும் இல்லை. பொழிச்சலூரின் கருவேலங் காட்டின் பின்புறமிருந்த இடுகாட்டில் கொண்டுப்போய் புதைத்துவிட்டு திரும்பினார்கள். வெவ்வேறு நிலவெளிகளில் தனது நினைவுகளை பிண்ணி யிருந்த இனியவளின் பூத உடல் இறுதி இறுதியாய் பொழிச்சல்லூர் மண்ணுக்குள் புதைந்துப்போனது. அவளது இறப்பு வரையிலும் அவ்வப்போது சந்தித்து வருகின்ற கடமையை ஒருபோதும் ரகுபதி தவறியதில்லை.

நான்கைந்து வருடங்களாகவே தனக்கு இருதய வலி அதிகமிருக்கிறது என்று சொல்லிவந்த அக்காளின் சாவை ரகுபதி முன்பே எதிர்பார்த்திருந்ததால், அன்றைய தினத்தில் கண்களில் நீர் திரளவில்லை. அவர் அமைதியுடன் அக்காளின் முகத்தைப் பார்த்தக்கொண்டு அமர்ந்திருந்தார். பழம் நினைவுகள் மட்டும் மனதில் விரிந்து பெரும் நினைவுக் காடாக அவருள் வியாபித்திருந்தது. விழுங்க எத்தனித்த பெரும் நீர் பரப்பிலிருந்தும் ஊரில் கொலை வன்மத்துடன் சுற்றிக்கொண்டிருந்த சாதி காப்பாளர்களிடமிருந்தும் முன்பொரு காலத்தில் தப்பியிருந்த இனியவள் தன் மூச்சை எவ்வித ஆர்ப்பாட்டமும் இல்லாமல் அமைதியுடன் முடித்துக்கொண்டது ஒரு வகையில் ரகுபதிக்கு ஆறுதலாகவும் இருந்தது. துக்கம் மனதை அழுத்த, வெறித்த விழிகளுடன் தரையில் பிரண்டு அழுதுகொண்டிருந்த அக்காளின் கணவனையே ரகுபதி அன்றைய பொழுதில் பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தார். அக்காளின் மீதான அவரது நேசிப்பு மரணம்வரையிலும் குறைந்ததேயில்லை.

“எனக்கு இந்த தாஜ்மஹால பாக்கனும்னு ரொம்ப நாளா ஆசைடா. இங்கிருந்து ரொம்ப தூரத்துல இருக்குன்னு உன் மாமா சொல்றாப்ல. வூட்டு கூரைக்கு பத்தடி உயரத்துலதான் இந்த ஏரோபிளேன்னு பறக்குது. நமக்கொரு சந்தர்ப்பம் அதுல பறக்க வாய்ச்சுதுன்னா செம்மையாக இருக்கும்ல?”

அக்காளின் உடலை நிலத்தில் சாய்த்து வைத்திருந்தபோது, வானத்தில் விமானமொன்று பெருத்த அலறலை கக்கியபடியே பறந்துக்கொண்டிருந்தது. நினைவு மயக்கத்தில் பீடிக்கப்பட்டிருந்த ரகுபதி மெல்ல அந்த சப்தத்தால், தற்கணத்திற்கு மீண்டார். அக்காளின் உயிர் அந்த விமானத்தின் சக்கரத்தின் மீதேறி பறந்துச் செல்வதான பிரேமையும் அவருக்கு ஒருகணம் உண்டானது. அக்காள் எனும் அபூர்வ உயிர் அவரது காலத் திலிருந்து நிரந்தரமாக அன்றைய தினத்தில் பிரிந்துச் சென்றிருந்தது.

அக்காளை காண ரகுபதி வந்துச் சென்றுக்கொண்டிருந்த தினங்களில்தான் அத்தனை நெருக்கமாக விமானங்களை அவர் பார்த்திருந்தார். விமானங்களுடனான அவரது பரீட்சயம் அக்காளை மீண்டும் கண்டுகொண்ட தினத்திலிருந்துதான் துவங்கி யிருந்தது. அவ்வூரின் மீது பெரும்பாலான நேரங்களில் விமானம் பறவைகளைப்போல மிதந்து மேகம் நோக்கி நகரும். அதன் பலத்த இரைச்சல் நாள் முழுவதும் தொடர்ச்சியாக ஒலித்தபடியே இருக்கும். சமயங்களில் திடுக்கிடலையும் உருவாக்கும். அதனாலேயே இன்றைய பொழுதில் விமானங்களை பார்க்கும் நேரங்களில்கூட இயல்பாக பொழிச்சலூர் பாதைகளும் அக்காளின் நினைவும் மனதில் எழுவதை அவரால் தவிர்க்க முடியாமல் இருந்தது. காலம் சுருள்சுருளாக மெல்ல நழுவிப் போயிருந்தது.

காலம் எத்தகைய விநோதங்களை நிகழ்த்திவிடுகிறது? தன்போக்கில் உயிர்களின் முகங்களையும் உறவுகளின் பிணைப்பு சங்கிலியையும் குலைத்து வெவ்வேறு வடிவ தளங்களுக்கு நகர்த்திவிடுகிறது. மனிதன் ஒருபோதும் தன்னிலையில் தேங்கிவிட காலம் அனுமதிப்பதில்லை. அவன் நிகழ்ந்துகொண்டே இருக்கிறான். அருவத்தில் இருந்து நேர்த்தி அமையப்பெற்ற உருவத்திற்கும் பிறிதொரு நாளில் சிதைவில் பிறழ்வுற்ற உருவத்தில் இருந்து மீண்டும் அருவத்திற்கும்! எனில் மனிதன் எங்கிருந்து, எங்கு வந்து, என்ன வாழ்ந்து, எதனில் கரைந்து காணாமலாகிறான்! காலம் கொத்தி உண்ணும் சிதை அல்லது இரைதான் உயிரோ?

இப்போதெல்லாம் ரகுபதிக்கு அவரது மகள் வயிற்று பேரனான குணாவுடன்தான் சகலமும். வரும் ஆண்டில் பனிரெண்டு வயதை பூர்த்திச் செய்யவிருக்கும் குணாவுக்கும் அவனது தாத்தனுடன் நேரத்தை செலவழிப்பதில் அலாதி பிரியம். இருவரும் சைக்கிளில் ஊர் தெரு முழுக்க சுற்றியலைவார்கள். வாரமொருமுறையாவது திரையரங்குக்கு சென்றுவிடுவார்கள். பெரியவர் கதிரேசன் நடத்தி வரும் குதிரை கொட்டகையில் காலவரையறையின்றி அமர்ந்து பொழுதைப் போக்குவார்கள். சமீப தினங்களாக மாலைவேளையில் விமானம் தரையிறங்கும் காட்சிகளை காண்பதும் அவர்களது வாடிக்கையாகிவிட்டது.

*ரகுபதி தனது தினங்களின் பாரத்தை குணாவிடம் ஒருபோதும் காண்பித்துக் கொள்வதில்லை. அவனுக்கு எது வேண்டுமென்றாலும் முகம் கோணாது செய்துக் கொடுப்பதில் அவருக்கும் பெரும் ஈடுபாடு இருந்துக் கொண்டிருந்தது. தனது வயதை ஒத்த பெருசுகளிடமிருந்து விலகி, சிறு உயிர் ஒன்றுடன் பந்தம் உண்டாக்கிக்கொண்டு ஊர் முழுவதும் உலவித் திரிவதும் அவருக்கு விருப்பமானதாக இருந்தது. வீட்டில் அவரும் அவரது மனைவியும் குணாவை பராமரிப்பதில் தங்களது பெரும் பலத்தை செலவிட்டுக் கொண்டிருந்தார்கள்.*

*குணா மிகுந்த சேட்டைப் பிடித்த சிறுவன். அவனை அவ்வளவு எளிதில் இருவராலும் திருப்திப் படுத்திவிட முடிந்ததில்லை. வெளியில் அவனை அழைத்துச் செல்லவே ரகுபதியின் மனைவிக்கு பெரும் தயக்கம் இருந்தது. முன்பொருமுறை கூண்டில் அடைக்கப்பட்டிருந்த முயல்கள் இரண்டை பார்த்தவன், உடனடியாக தனக்கும் இரு முயல்கள் வேண்டுமென்று அடம்பிடிக்க ஆரம்பித்துவிட்டான். கிழவிக்கு அவனை சமாதானம் செய்வதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது. தரையில் அழுதுபுரண்டான். தனது பிடிவாதத்தை கைவிடாத அவனை ஆற்றுப்படுத்த முயல்களை ரகுபதி வாங்கி வந்து அவனிடத்தில் கொடுத்தார். ஆனால், சில நாட்களிலேயே முயல் அவனுக்கு சலிப்பை உண்டாக்கிவிட்டது. முயல்களை வளர்க்கும் பொறுப்பை விருப்பமில்லாமல் கிழவிதான் தற்காலங்களில் சுமந்து வருகிறாள். திரவம் தெளித்தாற்போல தரையில் பூத்து விரிக்கும் முயல்களின் சிறுநீரை வழித்து சுத்தப்படுத்துவதே கிழவியின் பெரும்பணியாக இருந்துவருகிறது.*

*ரகுபதியுடன் குணா இரண்டு ஆண்டுகளாக வசித்து வருகிறான். அதற்கு முன்பு அரிதாகவே அவ்வப்போது தாத்தாவின் வீட்டிற்கு அவன் வந்துச் செல்வான். அவனது தாயார் கோமதி ராஜஸ்தானில் வசிக்கத் துவங்கியதற்கு பிறகு, அவனது கல்வியின் தொடர்ச்சிக்காக பத்தாவது பயில்கின்ற வரையில் அவன் இங்கேயே தாத்தனுடன் இருப்பது சரியென அவளுக்கும் அவளது கணவருக்கும் தோன்றியது. இருவரும் பலவிதமான ஆலோசனைகளுக்கு பின்னர், அவனை தாத்தனுடன் தங்கியிருக்க சம்மதம் தெரிவித்திருந்தனர். நேரம் கிடைக்கும்போதெல்லாம் வந்து சந்திப்பதாகவும் உறுதி அளித்திருந்தார்கள். குணாவுக்கு அவர்கள் இருவரும் அவனை பிரிந்துச் செல்கையில் ஒரு நிரந்தர பிரிவு உண்டாகிவிட்டதைப்போல, கண்களில் அலையலையாக நீர் திரண்டு உருண்டது.*

*முன்னதாக, ஒருமுறை அவன் ராஜஸ்தானுக்கு விமானத்தில் சென்று திரும்பியிருக்கிறான் என்றாலும் அவனைப் பொருத்தவரையில் தனது வசிப்பிடம் என்பது தான் முந்தைய வருடங்களில் வளர்ந்து வந்த வீடுதான். ராஜஸ்தான் அவனது மனதுக்கு அந்நிய நிலவெளியாகவே தோன்றியது. ஒவ்வொருமுறை அவன் விமானத்தை கண்ணுறும்போதும் தனது தாய், தந்தையர்கள் அதிலிருந்து இறங்கி கரம் விரித்து அவனை நெருங்கி வருவதான பிரேமையை அவன் வளர்த்துக்கொண்டிருந்தான். ஸ்கைப்பில் புன்னகைத்து தினசரி நலம் விசாரிக்கின்ற பெற்றோரை அவன் எப்போதுமே விரும்பியதே இல்லை.*

*ஒருமுறை தாத்தானிடம், "முன்ன மாதிரி எங்க பழைய வீட்டுல நானும் அப்பா, அம்மாவும் சேர்ந்து இருக்க மாட்டோமா தாத்தா" என்று கேட்டான். அவனது மழலை மனதின் இயல்பான கேள்விக்கு அவரால் அக்கணத்தில் பதிலுரைக்க முடியவில்லை. அவனது இதுபோன்ற பெரும்பாலான கேள்விகளுக்கு பதில் அளிப்பதில் இருந்து தப்பிக்க, எங்கேனும் தொலைவாக தனது சைக்கிளில் அவனை அழைத்துச் செல்வது அவரது வாடிக்கையாகிவிட்டது.*

*இருவரும் விமானத்தை எதிர்பார்த்து காத்திருந்தார்கள். விமானம் மெல்ல தரையிறங்கிக் கொண்டிருந்தது. சுற்றி நின்றிருந்த எல்லோரும் மகிழ்ச்சியில் கைத்தட்டி ஆர்ப்பரித்தனர். சிலர் தங்களது மகன்களிடம் விமானத்தை விரல் நீட்டி காண்பித்தார்கள். சிலர் தங்களது மொபைல் போனில் விமானத்தின் ஓடுதளத்தில் சறுக்கி ஓடும் காட்சியை படம்பிடித்துக் கொண்டிருந்தார்கள். எல்லோரின் கண்களிலும் பரவசம் பெருகியிருந்தது. ரகுபதியின் தோளின் மீதமர்ந்து குணா விமானத்தையே கண்கொட்டாமல் பார்த்தபடி இருந்தான். அவனது மனம் ஏக்கத்தால் நிறைந்திருந்தது. அவ்விடத்தில் கூடியிருந்தவர்களிலேயே ஏறக்குறைய குணா ஒருவன்தான் விமானத்தில் பயணம் செய்த அனுபவம் கொண்டிருந்தவன். ஆனால், அந்த அனுபவம் அவனது பெற்றோர் உடனான விலகலை நினைவுப்படுத்துவதாகத்தான் இருந்தது.*

*மெல்ல கூட்டம் கலைந்தது. கருவேலம் பூக்கள் செழித்து வளர்ந்திருந்த சிறு வனத்தின் இடையில் ஊர்ந்துச்செல்லும்சிறுவெளியில் சைக்கிளில் குணாவும் ரகுபதியும் பயணம் செய்துக் கொண்டிருந்தனர். அன்றைய தினம் பூர்த்தியாகிவிட்டதென்ற நினைப்பு இருவரையும் சூழ்ந்திருந்தது. குணா இயல்பாக வேறொரு நிலவெளியில் வசிக்கத் துவங்கியிருக்கும் தமது பெற்றோர் குறித்த நினைவுகளில் மூழ்கியிருக்க, ரகுபதியோ விமானத்தின் சக்கரத்தில் ஏறி வேறொரு வெளிக்கு பறக்க விரும்பிய தனது அக்காளின் நினைவால் பீடிக்கப்பட்டிருந்தார். டால்பின்கள் தமது மூக்கின் நுனியில் பந்தை சுழலவிடுவதைப்போல, காலத்தை சுழற்றியபடியே இருவரும் அந்த இருள்வெளியில் நினைவுகளை படரவிட்டபடி புகுந்துக் கொண்டிருந்தார்கள்.*

**ராம் முரளி <raammurali@gmail.com>**

# அழிவின் பாதையில் அமெரிக்க சினிமா

டேவிட் டென்பி
தமிழில்: ராம் முரளி



அமெரிக்காவில் ஆண்டுதோறும் 600க்கும் மேற்பட்ட படங்கள் திரையிடப்படுகின்றன. அமெரிக்காவில் தயாரிக்கப்படும் படங்களோடு, உலகின் வெவ்வேறு நாடுகளில் உருவாக்கப்படும் திரைப்படங்கள், ஆவணப்படங்கள், திரைப்பட விழாக்களில் கவனம் பெறும் திரைப்படங்கள், பரீட்சார்த்த முயற்சிகள், சிறிய பொருள் முதலீட்டில் தயாராகும் படங்கள் என அமெரிக்கத்திரையரங்கங்கள் வருடம் முழுவதும் திரைப்படங்களால் நிரம்பி யிருக்கின்றன. இதனால், பார்வையாளர்களுக்கு எப்போதும் ஏதேனுமொரு திரைப்படத்தை பார்க்கவும், விமர்சகர்களுக்கு ஓய்வில்லாமல் எப்போதும் எழுதிக்கொண்டே இருக்க வேண்டிய சூழலும் நிலவுகிறது.

சமீபத்தில் தன்னிச்சையாக உருவாக்கப்பட்டிருந்த இரண்டு திரைப்படங்களைப் பார்த்தேன். பென் ஜெயிட்லினால் காவியத்தன்மையில் இயக்கப்பட்டிருந்த 'Beasts Of Southern Wild', 'Compliance'. இரண்டுமே மிகச்சிறப்பான திரைப்படங்கள். இதுபோன்ற சிறிய அளவில் தயாரிக்கப்படும் திரைப்படங்கள் சினிமாவின் வளர்ச்சியில் அதிகளவில் பங்காற்றிக் கொண்டிருக்கும்போது, ஹாலிவுட்டில் தயாரிக்கப்படும் திரைப்படங்கள் அதற்கு நேரெதிரான விளைவுகளை ஏற்படுத்தி வருகின்றன. இதனால், ஹாலிவுட் ஒட்டு மொத்தமாக விமர்சகர்கள், பார்வையாளர்களின் கண்டனத்திற்கு உள்ளாகி இருக்கிறது.

தொடர்ச்சியாக திரையரங்குகளில் திரைப்படங்களை பார்த்து வந்த மக்களின் எண்ணிக்கை சமீப காலத்தில் மெல்லமெல்ல

சரிந்து வருகிறது. ஹாலிவுட் ஒரே வகையிலான சினிமாக்களை தொடர்ந்து உருவாக்கி வருவதால், சினிமாவை அதிகம் நேசிக்கும் பொதுப் பார்வையாளர்கூட வீட்டில் இருந்தபடி டி.வி.டிக்களில் தங்களுக்கு பிடித்த திரைப்படங்களை பார்த்து சினிமா மோகத்தை தணித்துக்கொள்ளும் நிலை உருவாகியுள்ளது. அதேபோல, பல வருடங்களுக்கு முன்பே திரையரங்குக்கு செல்லும் வழக்கத்தை உதறி விட்ட அறிவார்ந்த கூட்டமொன்றும் அமெரிக்காவில் இருக்கிறது. இவர்கள் ஒருபோதும் திரையரங்குகளுக்கு செல்வதில்லை. மாறாக, வீட்டில் இருந்தபடியே உலகில் மூலை முடுக்குகளில் தயாரிக்கப்படும் சிறந்த திரைப்படங்களை அறிந்துகொண்டு, அவற்றை தேடி பார்க்கிறார்கள். மேலும், இணையத்தில் அப்படங்களை பற்றிய தங்களின் கருத்துக்களை பகிர்வதன் மூலமாக ஒரு விவாதத்தையும் தோற்றுவிக்கிறார்கள். ஆனாலும், அவர்கள் விரும்பும் திரைப்படங்களை நோக்கி பார்வையாளர்களை திருப்பும் முயற்சி அதிகளவில் பயன் அளிக்கவில்லை. அமெரிக்க இயக்குநர்களுக்கும் தங்களின் அடுத்தடுத்த திரைப்படங்களை எதிர்பார்க்கும் மக்கள் அவசியப்படுகிறார்கள்.

திரைப்படங்களை அதிக நேசத்துடன் அணுகிய காலகட்டத்தை நினைவில் வைத்திருக்கிறேன். 1930களில், சராசரியாக வாரத்திற்கு 80 மில்லியன் மக்கள் திரையரங்கில் கூடுவார்கள். 40களின் மத்தியில், இந்த எண்ணிக்கை 90மில்லியனை தொட்டிருந்தது. ஆனால், இப்போது வெறும் 30மில்லியன் மக்கள்தான் திரையரங்கிற்கு செல்கிறார்கள். திரையரங்கில் கூடும் மக்களின் எண்ணிக்கை மூன்றில் ஒரு பங்குக்கு சுருங்கிவிட்டது. தொலைக்காட்சியின் பெருக்கம், இணையத்தின் பரந்த வெளி மக்களுக்கு சினிமாவை அதிக சுவாரஸ்யமில்லாத, வழக்கமான ஊடகமாக உணர செய்துவிட்டது.

80களில் சினிமாவின் வணிகம் உச்சத்திலிருந்தது. புதிது புதிதாக சினிமாவில் கையாளப்பட்ட யுத்திகள் மக்களை தொடர்ந்து திரையரங்கிற்கு கூட்டி வந்தது. குறிப்பாக, அனிமேஷன் வகை திரைப்படங்கள் இளைஞர்களை அதிகமாக கவர்ந்திருந்தது. இதனால், வார இறுதியில் எப்போதும் திரையரங்கம் மக்கள் நெருக்கத்தால் நிரம்பி வழிந்தது. ஆனால், இப்போது அனைத்தும் சலித்துப்போய்விட்டன. முன்னெப்போதும் இல்லாத வகையில் ஹாலிவுட் சினிமா அதிக மாற்றங்களை கோரி நிற்கிறது. இதனால், எதிர்காலத்தில் எவ்வகையான சினிமாக்கள் ஹாலிவுட்டில் தயாரிக்கப்படும் என்ற குழப்பம் நிலவி வருகிறது.

கடந்த கால சினிமாவின் வரலாற்றை அசைபோடுகையில் துயரம் மட்டுமே மிஞ்சுகிறது. ஆனால், உண்மையில் நாம் இப்போது செய்ய வேண்டியதெல்லாம் கடந்த காலத்தை பற்றி சிந்தித்துக் கொண்டிருக்காமல், நம்முடைய எதிர்ப்பை அழுத்தமாக பதிவு செய்வதுதான். வணிகத்தை மையமாக வைத்து சுழலும் சினிமாக்களை எப்படி சினிமாவின் கலை அம்சங்களை சிதைக்கின்றன என்று நினைக்கையில் உண்மையில் பித்து பிடித்ததை போலுள்ளது. எப்படி மக்கள் இதுபற்றி சிந்திக்காமல் இருக்கிறார்கள் என்று அஞ்சுகிறேன். மக்கள் சினிமாவின் மீதிருந்த நம்பிக்கையை கொஞ்சம்கொஞ் சமாக இழந்து வருகிறார்கள். தங்களுடைய எதிர்ப்பு குரல், வெறும் வெற்று கூச்சலாக மிஞ்சிவிடும் என்று நினைக்கிறார்கள். வணிகத்தை குறிவைத்து இயங்கும் ஹாலிவுட் சினிமா ஒரு வினோதமான வடிவத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருப்பதை நினைத்து அவர்கள் வருந்துகிறார்கள். அதனால், தங்களின் எதிர்ப்பு எவ்விதத்திலும் பயன்படப்போவதில்லை என்று உடல் கூசி நிற்கிறார்கள்.

மார்வல் காமிக்ஸ் உருவாக்கிய முக்கிய சாகச கதாபாத்திரங்கள் அனைத்தையும் ஒன்றிணைத்து வெளியான 'The Avengers' திரைப்படம் உலகளவில் மிகப்பெரிய வெற்றியடைந்த திரைப்படமாகக் கொண்டாடப்படுகிறது. வெளியான ஓரிரு மாதங்களிலேயே ஒன்றரை பில்லியன் வசூலித்து பெரும் சாதனை படைத்திருப்பதாகப் போற்றப்படுகிறது. 220 மில்லியன் முதலீட்டில், வளர்ந்து வரும் தொழிற்நுட்ப வசதியினை பயன்படுத்தி, மிகவும் சாதுர்யமான சந்தைப்படுத்துதலின் மூலம் 'The Avengers' இதனை நிகழ்த்தியது. ஆனால், அதன் பிறகு இப்படம் டிஜிட்டல் சினிமாக்களின் சீரழிவு என்று ஒட்டுமொத்தமாக எல்லோராலும் பழிக்கப்பட்டது. தொழிற்நுட்ப சாத்தியங்களை மிகவும் மோசமாக கையாண்ட திரைப்படம் என்று அடையாளப்படுத்தப்பட்டது. அமெரிக்க சினிமா தொடர்ந்து இதுபோன்ற அறிவற்ற முயற்சிகளை பாய்ச்சுவதும், பின் சில வாரங்களிலேயே இத்தகைய முயற்சிகள் பெரும் நகைப்புக்குள்ளாகி வருவதும் நடந்து வருகின்றன. இத்தகைய முட்டாள்தனமாக செயல்பாடுகள்தான் அமெரிக்க சினிமாக்களை இப்போது இயக்கி வருகின்றன.

மிகப்பெரிய படங்களாக தங்களை பிரகடனம் செய்துக்கொள்ளும் அனைத்து திரைப்படங்களும் பெரு நிறுவனங்களின் பைத்தியக்காரத்தனமான முரண்பாட்டை விவரிப்பது என்னும் மையத்திலேயே ஊறியிருக்கின்றன. குறிப்பாக, உலகம் முழுவதும் கொண்டாடப்பட்ட கிறிஸ்டோபர் நோலனின் Inception திரைப்படம் அசாதாரணமான சிக்கலானதொரு கட்டமைப்பில் உருவாக்கப்பட்டிருந்தாலும், அப்படம் கனவை பற்றியது மட்டுமே அல்ல. மாறாக, அத்திரைப்படம் பெரு நிறுவன தொழிலதிபர் ஒருவர், தொழிற் போட்டியால், முன்னணியில் இருக்கும் மற்றொரு தொழிலதிபரின் மூளையில் விதைக்கும் கருத்துக்களைப் பற்றியதும்தான்.

நோலனின் திரைப்படம் மிகவும் விசித்திரமானது. ஆனால், துளியும் பயனற்றது. காலத்தை காட்டவியலாத பழுதடைந்துவிட்ட ஆடம்பரமான கடிகாரத்தைப் போன்றது. சமீப காலமாக ஹாலிவுட்டில் தயாரிக்கப்பட்டு வரும் திரைப்படங்களிலிருந்து இப்படம் துளியும் தனித்து நிற்கவில்லை. மாறாக, எல்லோரும் பின்பற்றி வரும் அதே பெரு நிறுவன முரண்பாடு எனும் மையத்தை தனது பாணியில் அவர் உருவாக்கியிருக்கிறார். உண்மையில், இப்படங்கள் வெளி நாடுகளில்தான் அதிகளவில் வசூல் சாதனை



நிகழ்த்துகின்றன.

இந்த திரைப்படங்களை தவிர்த்து திரையரங்கில் குவியும் மற்றுமொரு வகை முழுக்க முழுக்க முறையற்ற சாகசங்களைக் கொண்டாடும் திரைப்படங்கள். இவற்றில் பெரும்பாலும், சாலைகள் வெடித்து நிலத்துக்குள் புதைவதும், கார்கள் தகர்த்து எறியப்படுவதும், டிராகன்கள் எழுந்து சிகாகோ நகரத்தை விழுங்குவதும், பேய்களும் பிசாசுகளும் நகரத்தில் சகஜமாக உலாவுவதும் என மட்டகரமான தொழிற்நுட்ப உருவாக்கத்தில் நாம் பார்ப்பது நியூட்டனின் இயற்பியல் விதிக்கு முற்றிலும் எதிர்மறையானது. இத்திரைப்படங்கள் திரையரங்கினுள் மட்டுமே கிளர்ச்சியை உண்டாக்குகின்றன என்றாலும், திரையரங்களை விட்டு வெளியேறியதும் முழுவதுமாக மனதிலிருந்து அதன் பிம்பங்கள் கரைந்து வடிந்துவிடுகின்றன.

ஒட்டுமொத்தமாக பார்க்கின்றபோது ஹாலிவுட் சினிமாக்கள் கவர்ச்சியாக, மிகவும் பெரியதாக ஊடகங்களால் தொடர்ந்து உயர்த்திக் காட்டப்பட்டுக் கொண்டிருந்தாலும், உண்மையில் ஹாலிவுட் சினிமா அதன் உட்சபட்ச வீழ்ச்சியை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது. இதை என்னால் முற்றிலும் ஜீரணித்துக்கொள்ள முடியவில்லை. அதிகப்படியான கோபத்தை ஹாலிவுட் சினிமாவின் போக்கு உண்டாக்குகிறது. காதல், சாகசம், உணர்வுகள் என அனைத்தும் ஹாலிவுட்டில் கற்பனை வடிவங்களில் சுருக்கப்பட்டுவிட்டன. மனித உணர்வுகள் ஹாலிவுட்டிற்கு அப்பாற்பட்டவையாக மாறிவிட்டன. கற்பனை வடிவங்களை உருவாக்குவது என்பதே ஹாலிவுட்டின் இயல்பாகிவிட்டது.

அதே சமயத்தில், ஸ்டுடியோக்கள் தங்களுக்கே உரித்தான சில குறிப்பிட்ட பாணியிலான திரைப்படங்களை வழக்கம்போல எவ்வித அயர்ச்சியும் இல்லாமல் தொடர்ந்து தயாரித்து வருகின்றன. திகில், நகைச்சுவையுடன் கூடிய இளம் வயது காதல், குடும்பத்துடன் பார்க்கக்கூடிய அனிமேஷன் திரைப்படங்கள் என ஸ்டுடியோக்கள் தாங்கள் வகுத்துக் கொண்டுள்ள பாதையில் தொடர்ந்து பயணித்துக்கொண்டிருக்கிறார்கள். அதோடு, சில நல்ல திரைப்படங்கள் என அங்கீகரிக்கப்படும் படங்களை விநியோகம் செய்கின்றன. உண்மையில், இவ்வகை படங்கள் புத்திசாலித்தனமாக எழுதப்பட்டவை. கூடுதலாக, இவ்வகை படங்கள் வருட இறுதியில் ஆஸ்கார் போன்ற பரிசுகளையும் வாங்கி விடுகின்றன.

ஸ்டுடியோக்கள் அதிகம் சிக்கல் எதுவும் இல்லாமல் ஒரே சமயத்தில் 'The Avengers' போன்ற மட்டகரமான மசாலா படங்களை தயாரித்தல்,, சோர்வில்லாமல் பயணிக்கக்கூடிய பார்வையாளர்களின் கவனத்தை ஈர்க்கக்கூடிய படங்களை விநியோகித்தல் என்று மிகவும் எச்சரிக்கையுடன் செயல்படுகின்றன. இதன்மூலம், உணர்வுகளைப் பிரதிபலிக்கக்கூடிய கலையம்சங்கள் நிறைந்த திரைப்படங்களை தயாரித்தல் எனும் ஆபத்தான முடிவை எடுக்க வேண்டிய சூழல் அவர்களுக்கு இல்லாமல் ஆகிறது. வரலாறு முழுவதும் ஸ்டுடியோக்கள் இத்தகைய பங்களிப்பையே திரைப்படங்களுக்கு ஆற்றி வருகின்றன. அதனால், 'The Avengers' போன்ற படங்களின் வருகையினால், அமெரிக்க சினிமா சினிமாவின் சகல கலை நுணுக்கங்களும் சிதைக்கப்பட போகிறது என்பதில் துளி சந்தேகமுமில்லை. ●

# இன்பம் கொள்ளை போகுதே

## பொ. கருணாகரமூர்த்தி

### ஓவியம்: குமார் பட்நாயக்



ஒட்டிசுட்டானிலிருந்து புதுக்குடியிருப்பு நோக்கி வடக்காகச் செல்லும் பாதையில் பத்து கிலோமீட்டர் போனால் அது ஒரு சிறிய கணவாயில் கீழிறங்கும். அதன் அதியாழத்தில் பேராறு எனப்படும் சிற்றாறு மெல்லத் தவழ்கிறது. கீழிறங்க இறங்க அடர்வனத்தினூடு வந்து பேராற்றோடு விளையாடிய பவனத்தில் அது ஏற்றியனுப்பும் சீதளம் சுகமாக முகத்தில் முத்தும். பேராற்றின் வாராவதியில் தன் மிதியுந்தைச் சாத்திவிட்டு அதன்கீழ் சலசலக்கும் ஆற்றைச் சிறிதுநேரம் வேடிக்கை பார்த்தான். ஆனாலும் எதையும் வேடிக்கை பார்க்கவோ மனதைக் குவிக்கவோ முடியாமல் திரும்பத் திரும்ப மனைவி ராகினியின் சமீபகாலச் சாங்கியங்கள் திரும்பத் திரும்ப மனதில் வந்து முட்டிச் அவனைச் சஞ்சலப்படுத்துகின்றன.

தன் அந்தரங்கத்தை, மனஅவசங்களை எவரிடமும் மனம்விட்டுப் பேசவும் அவனுக்கு முடியாது, ராகினியைப் பற்றி இன்னொருவரிடம் பேசுவதாவது. அதைவிட அபத்தம் வேறிருக்காது. ஆறு தவழும் சிறுகணவாயின் வடதீரத்தில் ஏறும் ஏற்றமான பாதையில் இனி மிதியுந்தை மேலே தள்ளவேண்டும். இவனுக்கு ராகினியின் போக்குகள் தரும் மனச்சுமையானது கூடவே மிதியுந்தில் ஒரு ஆட்டுக்கல்லையும் சேர்த்து வைத்துக் கட்டிக்கொண்டு உன்னி ஏறுவதைப் போலொரு பிரமையைத் தந்தது.

'கடவுள் அவளை வெள்ளந்தியாய் அழகாகவும் படைத்திட்டாரா, அவள் என்ன செய்வாள்... இவளாவது சுற்றிக்கொண்டுவாற கானான் கோனானுகளோட, 'இ' 'ஈ'யென்று இளிக்காமலாவது இருக்கலாமில்லை, இவள் இளிக்கறது பயல்களுக்கு இதைலேசாய்வசைச்சிடலாமென்றுதோணுதுபோல... சிந்தனைகள் அழுத்த மேலேறினான். இருமருங்கிலும் தேக்கு, முதிரை, பாலை, பூவரசு மரங்களும், பசும் இலைதழைகளும் வெய்யிலை வீதியில் விழவிடாது நிலையாக நிழலைத் தந்துகொண்டிருக்கின்றன.

இந்நிழற்காட்டுக்குள் முள்ளியவளை, தண்ணீரூற்று, புதுக்குடியிருப்பு, ஒட்டிசுட்டான், நெடுங்கேணிப் பகுதிகளில் சேவையிலிருக்கும் அரச நிலஅளவையாளர்களுக்கு உதவியாளர்களாகப் பணிபுரியும் சிங்களத் தொழிலாளர்கள், தளப்பத்தோலைகளால் அமைக்கப்பட்ட வாடிவீடுகளில் வாழ்ந்தார்கள். இன்னும் அங்கே காணி அபிவிருத்தித் திணைக்களத்தின் ஊழியர்களுக்கு அலுமினியத் தகரத்தாலும் மரங்களாலும் சீமெந்தினாலும் அமைக்கப்பட்ட வாடிவீடுகளும் இருந்தன.

அது இலங்கைக் காவல்துறையின் கெடுபிடிகள் இல்லாத காலம். இவ்வாடிகளில் வாழ்ந்தவர்களில் பெரும்பாலானோருக்கு கசிப்புச் சாராயம் காய்ச்சுவது பகுதி நேரத் தொழிலாகும். கிழக்கு வன்னிப் பிரதேசத்தின் சாரயத் தேவையைப் பூர்த்திசெய்ய வேண்டி அவர்கள் பெருமரங்களினால் இயற்கையான கூடாரங்களாக அமைந்திருந்த வன்னிக்காடுகளில் அங்கங்கே அடுப்புகள், செப்புக்கலன்கள், அவற்றோடிணைத்த மதுசாரத்தை ஒடுக்கும் செப்புக்குழாய்கள் வைத்து அரும்பாடுபட்டு உழைத்தனர். எந்த வாடிக்குப் போனாலும் போத்தல் 4 ரூபாய்க்கு 'கசிப்பு' வாங்கலாம். சில வாடிகளில் கூடவே பீடி, சிகரெட், வெத்தலை, பாக்கு, புகையிலைகூட விற்பனை செய்யப்பட்டன.

கடைசி வாடியைத் தாண்டிச் செல்கையில் இவனுக்கும் ஒரு 'அரை' எடுத்துக்கொண்டு போனாலென்ன... ஒரு சோட்டையடித்தது. வாடியொன்றில்போய் போய் அரையை வாங்கவும், இவனுக்குப் பரிச்சயமான பிரேமதாஸ அதை ஒரு யானைச் சோடாப் போத்தலில்விட்டுக் கிடைச்சி மூடியை இறுக்குக்கையில், அவனுக்கு பீடி ஞாபகம் வரவும், அரைக்கட்டு சிங்கம் பீடியும் வாங்கிக்கொண்டான்.

மேட்டு நிலம் மறையவும் வரும் சமதரைக் குறிச்சி கெரிடமடு. இதில் ஒருகாலம் தென்மராட்சி, குடிநீர் வளங்கள் குறைவான தீவகப்பகுதி மக்களுக்கு இரண்டு ஏக்கர் வீதம் காணிகள் வழங்கிக் குடியேற்றப்பட்ட குடியிருப்புகள் அமைந்துள்ளன, யாருடைய முன்யோசனையோ எல்லாக் குடியிருப்புகளினதும் வீதிப்பக்க வேலிகளில் வேம்பு, தேக்கங் கன்றுகளை நட்டதால் அவை நிரையில் வளர்ந்து அக்குறிச்சியையே ஒரு பூங்காவைப்போல் பசுமையாகவும் குளிர்ச்சியாகவும் ஆக்கியுள்ளன. அதில் ஒன்றுதான் அவர்களது குடியிருப்பு.

அப்பூமி தண்ணீர் தேங்காத செம்மண் கலந்த வண்டல் நிலம். அதில் பதியன் முறையில் உருவானதும், வறட்சியைத் தாங்கக்கூடியதுமான முருங்கைகளை நட்டிருக்கிறார்கள். அவை ஆண்டு முழுவதும் நன்கு முகஞ்செய்கின்றன. அவர்கள் தோட்ட செய்கைக்காக ஒரு கிணறும், வீட்டுப்பாவனைக்காக வீட்டுக்கு வடக்காகக் கோடியிலும் ஒரு ஆறடிவிட்டமுள்ள



சிறிய கிணறும் வெட்டிக் கட்டியிருக்கிறார்கள். மழைவீழ்ச்சி குறைவான கோடைகளில் பெரிய கிணறு லேசாக வற்றப் பார்க்கவும் உள்ளே இரண்டு குழாய்க் கிணறுகளையும் அமைத்திருக்கிறார்கள். இப்போ ஊற்றுப் பொய்ப்பதில்லை. மிளகாய், வெங்காயம், அவரை, தக்காளி, கத்தரி; சிறுபோகத்தின்போது பயறு, எள்ளு, உளுந்து, நிலக்கடலை பயிரிடுவார்கள்; தை பிறந்து மிளகாய், கத்தரி நாற்று மேடை போடும்போது நாலைந்து மேடைகள் அதிகமாகவே போட்டு மேலதிக நாற்றுக்களை அயலவர்க்கு விற்பார்கள். சின்னதாக ஒரு கோழிப் பண்ணை, கொஞ்சம் ஆடு மாடுகள் வைத்துக்கொண்டு சீவியத்தைத் தள்ளிக் கொண்டிருக்கிறது அந்த இளங்குடும்பம்.

முள்ளியவளையில் இருந்து புதுக்குடியிருப்பு வரை சுற்றுவட்டத்தில் கம்பிக்கட்டை தாழ்ப்பது, தோட்டம் சாறுவது, வயல்மூலை கொத்துவது, தகரை / அலம்பல் தாழ்ப்பது போன்ற பணிகள் ஏதாவது இருந்தால் போய்வருவதற்கு இந்த மிதியுந்து அவனுக்குக் கைகொடுக்கிறது.

அவன் மனைவி ராகினி, அவளது புதினமான பெயரைப் போலவே அவளும் அந்தப் பிரதேசத்துக்கு அந்நியமாக, துருத்தித் தெரியுமொரு அழகி. நீளமான முகவாகு, கொடியைப் போலொரு உடல்வாகு, அவள் செல்லமாகத் தளம்பித் துவண்டுகொண்டு நடக்கிற சாங்கத்தில் கவிதைகள் கனியும். கபடில்லாத மனம், அந்நேகமாக சோட்டி உடுத்திருப்பாள், சிலவேளையில் முழுக்கவுணும். என்ன தோட்டத்தில் வேலையாயிருக்கும்போதோ, சமைக்கும்போதோ யாரும் படலையில வந்து கூப்பிட்டால் கழற்றி வீசிய மாராப்புத்துகிலையோ துப்பட்டாவை அவ்விடத்திலேயே விட்டுவிட்டு நின்றமானிக்குப் போய்விடும் பேதமை எவருக்கும் அவளை ஒரு பள்ளிச்சிறுமி என்றுதான் கணிக்க வைக்கும். உலகம் மாறும் வேகத்துக்கு இதெல்லாம் ஒரு

விஷயமில்லைத்தான். ஆனால், பீடிக்கு நெருப்புக்குவாற விடலைகளின் கண்ணில ராகினி எத்துப்பட்டால் அவர்கள் நின்று வழிவதும் குழைவதும் அத்தை யித்தை எனக் கதைச்சுக்கொண்டு நேரத்தையோட்டி பீடியை முழுசாய் வலிச்செறிஞ்ச பின்னால் முற்றத்தைக் காலிபண்றதுமே வாடிக்கை.

வழியிற பயலுகளோட இவள் ஏன் இழிக்கப்போவான் என்பது இவன் மனதின் தீராத சம்வாதம். ஆனாலும் அவளிடம் கடிந்தோ கடுமையாகவோ எதுவும் சொல்ல முடிவதில்லை. 'ஏன்டி அவங்க முன்னால வாறே' என்று இவன் கேட்கப்போக அதுவே அவள் மனதை சுருங்க வைத்தாலோ நோகடித்தாலோ இவனுக்குத்தான் தாங்குமா?

புதுக்குடியிருப்பு ஒட்டிசுட்டான் வீதியில் தன் ஊழியத்தின் நிமித்தம் மிதியுந்தில் கெரிடமடுவூடாக சென்றுவரும் இந்த விவசாய உத்தியோகத்தரின், சங்காத்தம் அவர்களுக்கு ஏற்பட்டதே தற்செயலாகத்தான். ஊரில் எல்லோரும் அவரை ஓவசியர் ஐயா என்றார்கள். இவன் தற்செயலாக வீதியில் பூவரசம் கெட்டொன்றை ஒடித்துப் பல்லை விளக்கிக்கொண்டு நிற்கையில் தற்செயலாக இவனைக் கடந்து மிதியுந்தில் போனவரைத் தற்செயலாக இவன் விளித்து, "ஐயா மிளகாய்மேடைக்கு என்ன உரம் ஐயா போடலாம்?" எனவும் அவர் தடுப்பானைப் பிரயோகித்து மிதியுந்தை நிறுத்திவிட்டு, உருளியில் இருந்தபடியே தரையில் காலையூன்றிக்கொண்டு, "என்ன அடியுரம் போட்டீர்" என்றார்.

"வீட்டுக் குப்பையும் எருவுந்தான்..."

"அப்ப இப்போதைக்கு ஒன்றும் வேண்டாம், இரண்டிலைவிட்டாப்போலஇலைபழுப்பாய்மஞ்சளா யிருந்தால் மட்டும் எல்லுப்போல யூரியா தண்ணீரோட கலந்து பனுக்கும், வேற ஒன்டும் வேண்டாம்..." என்று சொல்லிக் கொண்டிருக்கையில் வளவுக்குள் மேயக்கட்டிவிட்ட மாட்டையும் கன்றுகளையும் அவிழ்த்துத் தொழுவத்துக்குள் கட்டப்போன ராகினி, 'மனுஷன் யாரோடயோ கதைக்கிறான் யாராயிருக்கும்' என்று விண்ணானம் பார்க்கப் படலைக்கு ஓடி வந்தாள். மணிப்புறா மாதிரி குளுகுளு - குறுகுறுவென்றிருந்த அவள் அழகு மிதியுந்தை மேலே நகரவிடாமற் பண்ணி அவளைக் கொஞ்சம் உமியவைத்தது. ஒரு விவசாயி சந்தேகம் கேட்டால் அதை முழுமையாகத் தெளிவுறுத்த வேண்டியது ஒரு விவசாயப் போதானாசிரியர் கடமையாகும். சிரத்தையாக மிதியுந்தைவிட்டுக் கீழே இறங்கினார்.

"இவளைப் பார்த்தவன் எவனும் எதுக்குடா 'திகைப்பூண்டை' மிதிச்சவன் மாதிரித் தியங்கறாங்கள்' என்றது இவனுக்குப் பிடிபடவேயில்லை.

அடுத்த வாரம், "நாற்றுத்துளிர் விட்டுட்டுதோ பார்ப்பம்..." என்று தோட்டத்துக்கே வந்த ஓவசியரது கடமையுணர்வும் கொஞ்சம் மிகைதான்.

அதற்கடுத்த வாரம் வரும்போது, 'சித்திரை மழையோட வையுங்கோ' என்று சொல்லி மூன்றே ஆண்டுகளில் குலைகுலையாய்க் காய்த்து குலுங்கக்கூடிய இனமென்று மூங்கில் கொட்டுகளில் மூன்று சிறிய மாங்கன்றுகள் கொண்டுவந்தார். அவரே, 'கிணத்துக்கு அண்மையாக வளவின் பின்னுக்கு நட்டியளென்றால் தண்ணீர் ஊற்ற வசதியாயிருக்கும், கட்டாக்காலி மாடுகளும் வாய் வைக்காது' என்று மதியுமுரைத்தார்.

'தங்கமானதொரு மனுஷனாய்க் கிடக்கு' என்று இருவரும் ஆச்சரியப்பட்டனர். பின்னைய நாட்களில் மேலும் அவர் சில பலாக் கன்றுகளையும் ஜம்பு நாவல் கன்றுகளையும் கொண்டுவரவும் அவரது ஆலோசனைப்படி அங்கங்கே அவை நடப்பட்டன.

'ஒரு கௌரவமான உத்தியோகத்தனுக்கு வாழ்க்கைப் பட்டிருக்கக்கூடிய, வெளிநாடொன்றுக்கு பறந்து விட்டிருக்கூடிய இந்த மைனா, வன்னிக்குள் சிக்குண்டதன் விருத்தாந்தம் என்னவாயிருக்கும்.' ராகினியைக் காணுந்தோறும் ஓவசியரின் முன்மண்டைக்குள் குறுகுறுக்கும்

"அப்ப நீங்கள் எங்க படிச்சனீங்கள்?"

"உடுவில் கேள்ஸ் கொலிஜில."

"ஐசி... எங்கட தங்கச்சி சுகுணசொரூபியும் அங்கதான் படிச்சவ... என்ன உங்களுக்கு இரண்டொரு வருஷம் சீனியரா இருந்திருப்பா."

"எனக்குத் தெரியேல்ல... நாங்கள் 72ஆம் ஆண்டு அட்வான்ஸ் லெவெல் செய்த பாட்ச்."

"அப்ப உங்களுக்கு மிஸிஸ். பரந்தாமனைத் தெரியுமோ? ...ஐக் குலுக்கிக்கொண்டு நடப்பா..."

ராகினி விழுந்து விழுந்து சிரித்தாள். நிஜமாகவே ஓவசியரின் தங்கை அங்கே படித்தாளோ இல்லை ஓவசியர் கதைப் பொழிப்புக்கு சும்மாதான் தும்புவிடுகிறாரோ. வெளியே போயிருந்த அவன் அப்போதுதான் வந்து சேர்ந்தான். அவனுக்கு 'மிஸிஸ். பரந்தாமன்' என்றது காதில் விழுந்த துலக்கத்துக்கு 'அவ எதைக் குலுக்கி நடப்பா' என்றது விழவே இல்லை.

'அவ எதைக் குலுக்கி நடந்தால் ஓவசியருக்கு என்ன, அவர் அதை ஏன் ராகினிக்குச் சொல்லவேண்டும்.' இவனுக்கு அந்தச் சம்பாஷணையே லயிக்கவில்லை. 'இப்பதான் வந்தியளோ' என்று சம்பிரதாயமாக ஓவசியரை விசாரித்துவிட்டு, வீட்டைச் சுற்றிக்கொண்டு சின்னக் கிணற்றடிக்குப் போனவன், கால்மேலைக் கழுவிக்கொண்டு தலைவாசலுக்கு வந்தான். அப்போது அவர்கள் 'பேசுபொருள்' மாறிவிட்டிருந்தது.

குலுக்கி நடக்கிற டீச்சரைப் பற்றிய கதையென்றால் நான் வந்தபின்னாலும் தொடர்ந்து கதைத்திருக்கலாந்தானே? என்னத்துக்குப் மாட்டரை மாத்துகினம்? இவன் வந்திட்டான் என்றால் பிறகு ஓவசியரும் கனநேரம் வினைக்கெடார். அவனுக்கு வைக்கிற சாக்கில் ராகினி இரண்டாவது தேநீரையும் அவருக்குக் கொடுப்பாள், குடித்ததும் மாறிவிடுவார்.

வளவில் வைத்த மாங்கன்றுகள் தழைத்து நிமிரத் தொடங்கிய பின்னால் அத்தோடு அவர்கள் வளவின்



இதர பயிர் பத்தாடல்களுடலிலும் ஓவசியரின் கரிசனம் அதிகரித்தது. அவர் கொடுத்த மாங்கன்றுகள் தளிர்த்துதோ செழித்துதோ பரவாயில்லை. அவளின் தரிசனம் கிடைக்காத வருகைகளில் ஓவசியருக்கும் பொச்சம் அடங்குவதில்லை. அவன் இல்லாத வேளைகளில் ஓவசியர் அந்தரங்கத்தில் அவிழ்க்கும் சிருங்காரம், சல்லாபம், நிறைந்த வம்புப் பகிடிகளும் வேடிக்கைக் கதைகளும் ராகினிக்கும் மெல்லப்பிடிக்க ஆரம்பித்திருந்தன. அவர் வருகையை மெய்யாகவே விரும்பினாள்.

அவர்கள் வீட்டில் ஒரு பக்கேஸ் பெட்டிக்குள் அட்டைகள் கிழிந்து போயிருந்த இரண்டொரு ராணிமுத்துக்களையும் சித்திராலயாவையும் வண்ணத்திரையையும் குமுதங்களையும் கதம்பமன்ன உள்ளூர் மதாந்திகளையும் கண்டவர், 'ஓ இவள் கொஞ்சம் வாசிப்பாள்' என்பதை உய்த்துக்கொண்டு, 'நான் உங்களுக்கு அடுத்தமுறை நல்ல கதைப்புத்தகங்கள் கொண்ணந்தாறேன்... சுற்றிக்கொண்டு பார்த்தால் நீங்கள் என்ர வைஃப்பின்ர வழியில எனக்குச் சொந்தமாய் வாறீங்கள்" என்று போகிறபோக்கில் ஒரு குண்டையும் ஓவசியர் வீசினார்.

முன்பெல்லாம் படலையடியில் நின்றே 'வீட்டில யார்' என்று சம்பிரதாயமாகக் கேட்டுக்கொண்டுவரும் ஓவசியர் இப்போ நட்பும் பரிச்சயமும் அதிகமாக அவர்களின் முன்னேற்றத்தில் தனக்கும் கரிசனையுண்டு போன்றதொரு பாவனையுடன் மெல்லமெல்ல முற்றம் வரைக்கும் ஈருருளியில் வந்து இறங்கத் தொடங்கவும் இவனுக்குள் கேந்தியும் கிலேசமும் மிகைத்தன.

இவ்வளவு உதவிகள் செய்யிற ஓவசியரின் மூஞ்சையைப் பார்த்து, 'இப்பிடியெல்லாம் செய்யாதையுங்கோ... எனக்குப் பிடிக்காது' என்று எப்படிச் சொல்றது, தனக்குள் மறுகினான். ராகினிடம் அவர் நடத்தையைத் தப்பாகச் சொன்னால் என்னை என்ன நினைப்பாள்?

வெளியில் எங்கேயாவது வேலைக்குப் போனால்த்தான் அவனுக்குக் கையில் காசு புரளும். அப்படியே பொத்திக்கொண்டுவந்து அவளிடம் கொடுப்பான், இப்போதெல்லாம் கிடைக்கும் காசுக்கு காலோ அரையோ வழியில் கீறிக்கொண்டு மீதியைத்தான் அவளிடம் தருகிறான். ராகினிக்கும் தேவைகள் மிகக்குறைவு. அவள் காசுக்குப் பறக்கிற ரகமுமல்ல. இன்றைக்கு வழியில் புதுச்சரக்கென்றார்கள், 2 அவித்தமுட்டையும் கால்ப்போத்தல் பெருக்கனுமாய் அவனாகவே கீறிக்கொண்டுவிட்டான்.

அவனுள் அச்சிறு லாகிரியிலும் மனவெளியெங்கும் புதிய சிந்தனைகள் அலையத் தொடங்கின. 'இச்சிறுக்கிக்கு நான் அலுத்துப் போனேனோ இல்லை நான் இல்லாவிட்டாலும் ஒரு குழந்தை பெத்துக்க வேணும்னு நினைக்கிறாளோ...'

கசிப்பு தூக்க காற்றில் மிதந்துகொண்டு மிதியுந்தில் வருகையில் வீட்டை அண்மியதும் வீதியில் யாரோ குரலைத் தணித்துக்கொண்டு இவனிடம், "அண்ணே இங்கே பெருக்கன் எங்கேயும் எடுக்கலாமோ" என்று விசாரித்தார்கள். அவர்களுக்குக் கையைக் காட்டிவிட்ட பின்னர்தான் அத்திவ்ய யோசனை அவனுக்கு உதித்தது.

'எவனைப் பார்த்தாலும் பெருக்கன் விசாரித்தபடி அலையுறான்... ஏன் நானும் நாலு போத்தலை வாங்கி வைத்துக்கொண்டு சில்லறையாய் விற்றால் நாலு காசு

பார்க்கலாமோ... பின் தானாகவே ‘சாய்க் வேண்டாம். அவனவன் ஏமஞ்சாமத்தில வந்து கூக்காட்டிக் கொண்டிருப்பாங்கள், இன்னும் பீடி நெருப்புக்குவாற பயலுகளே வந்தால் கிளம்பிறாங்களில்ல, அதுக்குள்ள சாராயமும் விற்றால் சோக்காய்த்தான் இருக்கும்.’ அன்றிரவு கசிப்பு விற்பனையைப் பற்றி உள்மன சம்வாதங்களுடனும் உரத்த சிந்தனைகளுடனும் தூங்கினான்.

தோற்றத்தில் மன்சூர் அலிகான் மாதிரி இரணுவச் சீருடையணிந்த இருவரும், கசிப்பு விசாரித்தவனைப் போலிருந்த ஒருவனும், பீடிக்கு நெருப்பு கேட்கவந்தவொரு இளவலும், ஓவசியருமாகச் சேர்ந்து ராகினியை ஓட்டிக்கொண்டு போவதைப்போலவும், இவளும் எதிர்ப்பின்றி அவர்கள்கூட எடுபட்டு அள்ளுப்படுவதைப் போலவும் ஒரு ‘கொடுங்கனவு’ வந்தது. ‘ஓ’வென்று கத்தியபடி பதைத்தெழுந்து நடுச்சாமத்தில் வியர்த்தான். முதுகாலும் கழுத்தாலும் வழிந்த வியர்வையை ஒரு துவாயினால் துடைத்துவிட்டுச் சுக்குக் கோப்பியும் போட்டுக் கொடுத்துவிட்டு ராகினியும் இது உள்ளிறங்கும் திரவங்களின் சாங்கியமாக்குமென்று இருந்துவிட்டாள். அவனும் அதன்பின் அக்கசிப்பு வியாபாரயோசனையை முற்றாகத் துடைத்து விட்டிருந்தான்.

ஒருநாள் இவன் புதுக்குடியிருப்பில் கட்டிட நிர்மாணத் தளமொன்றில் சிற்றாள் வேலை பார்த்துவிட்டு, வழியில் வேட்டைக்காரர் ஒருவர் வீட்டில் போய் மரைவத்தலும் வாங்கிக்கொண்டு, வீடு திரும்பினான். மிதியுந்தின் நிறுத்தியை அவன் மடித்து விடமுதலே கைப்பிடியில் கொழுவியிருந்த நெகிழிப் பின்னல் பையுக்கும் மேலாக நீட்டிக்கொண்டுநின்ற வத்தலைக் கண்டுகொண்ட ராகினி சொன்னாள். “பாரன் இன்றைக்கு உமது அதிஷ்டத்தை... உதுக்கு உவப்பான ஐட்டமுமல்லே ஒன்றுமக்கு ஓவசியர் மாமாவும் கொண்ணந்திருக்கார்”.

இதுக்குவப்பான சாமான் எதுவாயிருக்குமென்று ஊகிக்க முடிந்தாலும் ‘ஓவசியருக்கு ஏனிந்த வேண்டாத வேலை’ என்று நினைத்தவன், தலைவாசலில் நுழைந்து அங்கிருந்த ஒற்றைக் கதிரையில் அமரவும், ராகினி, “மாமாவுக்கு யாரோ வாடியில வாங்கியந்து கொடுத்ததென்று கொண்ணாந்திருக்கிறார் பெருக்கன்” என்றபடி வெள்ளைச் சாராயப் போத்தலை எடுத்துவந்து காட்டினாள். புதுசாய் அவள் ஓவசியரை ‘மாமா’வென்று அழைப்பதும், அவ்வுறவின் நெருக்கமும் திகைப்பூட்டினாலும், தன் மனச்சிராய்ப்புகளை வெளிக்காட்டாமல் அவளைப் பார்த்துச் சிரித்துவைத்தான்.

ராகினி தோட்டத்தில் வெங்காயப் பாத்திக்குள் தாமாக முளைத்திருந்த பசளியையும் முளைக்கீரையையும், பிடுங்கப்போனாள்.

இவன் பீடிக்கு நெருப்பெடுக்க அடுப்புக்குக் கிட்டப்போனான், அடுப்பில் தணல் கனன்று கொண்டிருந்தது. ‘அப்ப ஓவசியருக்குச் சும்மா தேநீருக்கு மூட்டிய அடுப்பு மாதிரித் தெரியவில்லை. மேற்படியானுக்கு பெரும் உண்டாட்டும் நடந்திருக்குதோ... இவள் இடங்காட்டாமலே அவன் வந்திருந்து வழியிறான். எதுக்கும் ஒரு எல்லை வேணும்.’ திரும்பவும் கதிரையில் அமர்ந்து பீடியை வலித்தான்.

பெருக்கனின் தரிசனம் அவன் மனத்தைத் தாறுமாறாகக் குழப்பிப்போட்டது. சீமெந்து அரைச்சுவர் மேலே தெளிவாயிருந்த வெள்ளைப் பெருக்கனைப் பார்க்கப் பார்க்க அது அவனைப் பார்த்துக் கண்சிமிட்டுவதைப் போலிருந்தது. ‘அதைக் குடிப்பதா விடுவதா...’ என்று மனம் அல்லாடியதில் வைராக்கியத்தின் கடுமை தளர்ந்தது. நெகிழிப் பையிலிருந்த மரைவத்தலை எடுத்து முகர்ந்து பார்த்தான். அருமையான சேர்மானம். பெருக்கனுக்காகவும் அல்ல, மரவத்தலிருந்து காலிய சுகந்தத்துக்காகவும் அல்ல, அவை இரண்டும் சேர்வதால் அரிதாய் இசையும் சேர்மானத்துக்குத் தன் வைராக்கியத்தால் துரோகம் செய்தல் அறமாகாது.

எப்போதாவது உதவலாமென்று முன்னெப்போதோ கட்டிட வேலைத் தலத்திலிருந்து எடுத்து வந்து, கோடித்தாழ்வாரத்தில் சாய்த்து வைத்திருந்த இரண்டு இஞ்சிச் சதுர இரும்புவலையின் ஞாபகம் அவனுக்குள் பொறித்தது. மெல்லப்போய் அதை எடுத்துவந்து அடுப்பில் வைத்துவிட்டு மரை வத்தலில் இரண்டு கீலத்தை எடுத்து அவ்வலைமேல் போட்டான். மீதி வத்தலை மில்க்வைற் சணல்பையுள் போட்டு குசினியுள் தொங்கிய உறியில் வைத்தான். மரை வத்தல் வாடவும் துவாயை எடுத்துக்கொண்டு கோடிக்குப்போய் கிணற்றின் கமலையால் நீரை முகந்து நிதானமாகக் குளித்தான். அதற்குள் அயலிலிருந்து யாரோ நட்டதுக்கு நூறு நாற்றுக் குறையுதென்று கேட்டுவந்ததில் அதை அவர்களுக்குப் பிடுங்கிக் கொடுக்க திரும்பவும் தோட்டத்தில் நாற்றுமேடைப்பாகம் போனாள் ராகினி.

இவன் ஈரம் உலர்த்திய துவாயைக் கொடியில் போட்டுவிட்டு அதில் தொங்கி உலர்ந்து கொண்டிருந்த சாரத்தை எடுத்து உடுத்திக்கொண்டான். அடுப்பில் வாடிய மரை வத்தலிலிருந்து ஒரு விருப்புக்குரிய வாசம் கிளம்பவும் அதை எடுத்தொரு கடிகடித்தான். நல்ல முறுகல் பதத்திலிருக்கவும் அதையெடுத்து தகரவட்டிலொன்றில் வைத்துக்கொண்டு மடித்துவைத்த படங்கில் அமர்ந்து கசிப்புப்போத்தலைத் திறந்து முகர்ந்து பார்த்தான். நல்ல மூச்சான புதுக்கசிப்பு, பாலைப்பழ வத்தலைப் போலொரு சுகந்தம் அதிலிருந்து கமழ்ந்தது. கிளாஸை நிறைத்துக் கச்சேரியை மெல்லத் தொடங்கினான் சிங்கன்.

அரைக்கிளாஸ் உள்ளே போனதும் வஸ்த்து அவனை மிதக்கச் செய்தது. சாதாரண கசிப்புகள் என்றால் உடனேயே நடுமண்டையில் ஒரு மாதிரியாகக் கிறுகிறுக்கமட்டும்செய்யும். இதுஏதோசோளகக்காற்று மாட்டுக் குடிலைத் தூக்கிச் சுற்றுற மாதிரிச் சுழற்றிற்று, ஹெலிமாதிரி மேலேயும் கீழேயுமா உயர்த்தியும்... பதித்தும் வித்தியாசமாய்ப் பண்ணிக் கொண்டிருந்தது. அபினையோ ஹஷிஸ்கட்டையையோ ஓவசியர் போட்டு என்னோட விளையாடியிருப்பாரோ... ஒன்லி நானாட்டான் பெருமாள் அறியும்.



இன்றைக்கு பெருக்கன் அவனை மேலேமேலே மிதத்திச் செல்கையில் அவனுக்கு வேறு விபரீத எண்ணங்கள் ஜனித்தன. என்ன மசித்துக்கு ஓவசியர் இவளுக்குக் குமுதம், விகடன் கதைப் புத்தகங்கள் கொண்டு வருவான்? இன்றைக்குப் புத்தகங்கள் கொண்டாறவன் நாளைக்கு 'உனக்குப் பொருத்தமாயிருக்குமென்று வாங்கின்னான்' என்று ஒரு புடவையையும் கொண்டுவருவான். அவரைக் கண்டவுடன இவளுக்கு வாற இளிப்பு கெலிப்பு கேரல் எல்லாத்துக்கும் முதல்ல ஒரு முடிவு கட்டவேணும். தொழுக்கை டீச்சரின் கதை வந்ததும் இருவரும் விழுந்து விழுந்து சிரிக்கிறதும் லூட்டியடிக்கிறதும் எல்லாம் ஒரு எல்லை மீறிபோச்சு. ஓவசியரென்னா மாமாவாமோ, புதிசாய் ஒருமுறையும் சொந்தமும் கண்டுபிடிடித்திருக்கினம்... இன்றைக்கே கூத்தியைக் கேட்டுவிடுறன்: "என்னடி நீ அவனையும் சைற்ஃபிட்டிங்காய் வைச்சுக்கிறியோ...?"

மிளகாய் நாற்றைக் கொடுத்து சில்லறையை வாங்கிக்கொண்டு படலையைச் சங்கிலியால் பூட்டிவிட்டு வந்து கைகால் அலம்பிக்கொண்டு ராகினி வீட்டுக்குள் நுழையவும் அவன் மரை வத்தலைக் கடித்தபடி முழுக்கிளாஸையும் காலி பண்ணிவிட்டு கண்கள் சொக்க, காதுகள் சிவந்திருந்தான். போதை அதிகமானால் சாப்பிடாமலே படுத்துவிடுவான். கோர்க்காலியில் கழுவிக் காய வைத்திருந்த பீங்கான் கோப்பையில் சோற்றைப்போட்டு அதன்மேல் மங்குச்சூடைக் குழம்பை ஊற்றிக்கொண்டு வந்து அவன் முன்னால் வைத்துவிட்டு, கசிப்புப் போத்தலை நைஸாக நகர்த்திப்போய் தைலாப்பெட்டிக்குள் வைத்து மூடிவிட்டு அதன் மேல் உட்கார்ந்துகொண்டாள்.

"கவ்வாட்டுக் குலம்புக்கு பெருக்கன் சொம்மா... கணிதம் பேசுதடா... இன்னும் ஒரு சொட்டுத்தாம்மா என்ட ராவுணி" என்றபடி கிளாஸைத் தூக்கி அதில் இரண்டு விரற்கடை அளவுகாட்டிக் கெஞ்சினான். திரும்பத் திரும்ப அவன் அதையே சொல்லிக் கெஞ்சிக் கொண்டிருக்கவும் அரைமனதோடு மேலும் அரைக்கிளாஸ் அவளே வார்த்துவிட்டாள்.

ஒருவாறு கோப்பை முழுவதும் விரல்களால் துழாவிச் சாப்பிட்டு முடித்து எழும்ப முயன்றவனின் காலடியில் தரை தளம்பித் துடித்தது. உலாஞ் சிக்கொண்டு நின்றவனிடம் கோப்பையை வாங்கிக் கழுவிச் சாத்திவிட்டு, அவனுக்குப் பாயை விரித்துவிட்டாள். கருவாட்டுக் குழம்பும் பாலைப் பழவத்தல் வாசக்கசிப்பும் சேர்த்து அவனின் கதம்பமாக வீசிய வாசம் அவளுக்குப் பிடிக்கவில்லை. வெளியே கையலம்பிவிட்டு வந்தவன் அதேவேகத்தில் கன்வேஸு மடக்குக் கட்டிலை விரித்துவிட்டுப் படுத்துவிட்டான். சற்றே தள்ளிப்படங்கை விரித்து அதன்மேல் புற்பாயை விரித்துக்கொண்டு அவளும் படுத்தாள்.

தூக்கமும் கடுகி வந்தது. படுக்கையிலிருந்தபடியே அவன் கன்வேசுக்கட்டில் எழும்பியது. எழும்பிப் பனிமூட்டத்தினூடு பறந்தது. தொலைவில் அந்தரத்தில் சில சினிமா படங்களில் வருவதுப்போல சீமெந்தில்

செய்த சுவாமி சொரூபங்கள் முகில்களுக்கிடையில் தோன்றின. அவர்களுக்கிடையில் நிரஞ்சனியும் அடசீய்க்... ராகினியும் நிற்கிறாள். ஹவர்கிறாஃப்ட் மாதிரி அந்தரத்தில் கட்டிலில் இருந்த இவனைக் கீழே இறங்கச் சொல்லிக் கண்ணால் அவள் ஜாடை காட்டிறாள். இவன் பதிந்து இறங்கினால் வற்றாப்பளை அம்மன்கோவில் ஐயர் நிற்பதைக் கொண்டு அது வற்றாப்பளை அம்மன்கோவில் என்று அவனுக்குப் புரிகிறது. பஞ்சுப் பட்டியாய் தலைநரைச்ச ஐயர் அன்று கருகருவென வளர்ந்த சடாமுடியும் தாடியுமாய் இளமை பெயர நிற்கிறார். குழந்தைப் பேற்றுக்காக நேர்ச்சை ஏதோ வைத்தவளாம், அது செய்விக்க வந்தது என்றாள் ராகினி.

ராகினியின் தலையில் சடாரியை வைத்த ஐயர் ஆசீர்வதித்த பின்னால் அனாவசியமாக ராகினியின் கையில் பிடிப்பதுவும் கன்னத்தில் தடவுவதுமா யிருக்கிறார். ஐயரின் சாங்கியங்கள் இவனுக்கு துண்டறப் பிடிக்கவில்லை. அவரை எரித்து விடுவதைப் போலப் பார்க்கிறான். ஐயர் இவர்களது பிரசாதத்தட்டை எடுத்துச் செல்லுமாறு கைகளால் ஆக்ஞை காட்டுகிறார். வழமையான சம்பாவனை பெறுவதற்கான குழைதலுடன் கூடிய புன்னகைகூட ஐயரின் முகத்திலில்லை. கோவிலைவிட்டு இருவரும் வெளியேறுகிறர்கள். காற்றில் பஞ்சைப்போல 32 திசைகளிலும் எடுத்துச் செல்லப்பட்டு அலைக்கழிக்கப்பட்டுக் கொண்டிருந்தான். யாருக்கோ சலம் நிறைந்து முடுக்குவதைப் போல உணர்ந்தான். இல்லை எனக்குத்தான் சலம் முடுக்கி அணியம் விண்ணென்கிறது. திரும்பிப் பார்த்தான். அருகில் 'ராவுணி' இல்லை.

வேறொரு பாயில் படுத்திருந்தவளை எழுப்பிவிடலாகாதென்ற சூதானத்தோடு ஓசையெழுப்பாது வெளியில் வந்தான், நிறைபனி மூட்டமாக இருந்தது. சலத்தைப் பாவட்டை வேலியருகில் ஓடவிட்டபடி படலைப் பக்கமாகப் பார்த்தான். அங்கே படலையருகில் சிறிய வைக்கோற்போர் கணக்கில் முகிலைப்போல் ஒரு உருவம் இறங்கி அசைவதைப்போல் தெரிந்தது.

"டாய்...யாற்றா அவன் தாயோழி என்ட வீட்டை மேயப் பாக்கிறது" என்றபடி சாரத்தைத் தூக்கியபடி அதை விரட்டிக்கொண்டு ஓடினான். இவன் படலையை அண்மிக்கவும் அங்கே எவரையும் காணவில்லை. யாராவது இருட்டில் புகுந்து மிளகாய் நாற்றைப் பிடுங்கிவிடுவர்களோவென்ற பயத்தில் ராகினி சங்கிலி போட்டுப் பூட்டிய பூட்டு படலையில் தொங்கிக் கொண்டிருந்தது. 'நாற்றைக் களவெடுத்து நட்டால் பயிர் ஓங்கி வளர்ந்து முகம்செய்யும்' என்பது அவ்வூரிலிருக்கும் நம்பிக்கை.

'பாவம் ராவுணி ஒத்தைப் பெண்ணாய் குடும்பத்துக்காக எவ்வளவு பாடுபடுகிறாள், இன்று களைப்பில மாட்டைப் பிடித்துக்கட்ட மறந்திட்டாள் போலயிருக்கு.' தொழுவத்தில் நின்ற மாடுகளை அவிழ்த்து வந்து வீட்டுவிறாந்தையில் ஏற்றிக் கப்புகளில் கட்டினான், விறாந்தையில் நின்றிருந்த மிதியுந்தை உருட்டிப்போய் தொழுவத்தில் சங்கிலியால் பூட்டினான்.

திரும்ப அறைக்குள் வந்து அரிக்கன் லாம்பின் வெளிச்சத்தைச்சற்றே தூண்டி ராகினியைப் பார்த்தான். அவள் ஒரு குழந்தையைப்போலக் கைகளைக் கூப்பித் தொடைக்குள் புதைத்தபடி 'ல' வடிவில் சுருண்டு படுத்திருந்தாள்.

'ராவுணி... நீ மேட்டுக் கிணத்துத் தண்ணிடி, வாறவெள்ளத்தோட அடிபடமாட்டாய். கிளியை நான் சந்தேகிக்கலைடா... குறையும் சொல்லேல்லை, ஊரெல்லே வீண்கதை பறையும். அதுக்குத்தான்டா எனக்குப் பயம்.'

போதை ஏறினால் இப்படித்தான் அகவுவான்,

'ஓவசியரிட்டைப் புத்தகங்கள் எதுவும் வாங்கிப் படிக்காதை' என்று எப்படிச் சொல்வது? என் எண்ணம்போல் எதுவுமில்லையென்றால் அவளின் மதிப்பிலிருந்து சரிந்து விடுவேனே. சாமத்தில் ஓவசியர் வந்ததையும் தான் அவரைப் படலைக்கு வெளியே விரட்டியதையும் இவளுக்குச் சொல்லப்படாது.

'ஓவசியர் பின்னேரமும் வந்திருப்பானோ? சரியாய் நான் நிற்காத நேரங்கள் பார்த்து வாறானே...? பயல் எத்தனை மணிக்கு வந்திருப்பான்? நினைவு கலங்கலாக... இவர் என்ன மசித்துக்கு எனக்குக் கசிப்புக்கொண்டு வரோணும்... எனக்குச் சரக்கைத் தந்து மடக்கப் பார்க்கிறானோ கம்மனாட்டி, சோழியன் குடுமி சும்மா ஆடுமா...?'

முகத்தில் விகசிப்புடன் குழந்தை மாதிரிப் படுத்திருந்த ராகினியைப் பார்த்தான். அவள் வாய் புலம்புவது மாதிரி இருந்தது. "இதென்னப்பா... உன்ர லூஸுக் கேள்வி. நான் என்ன ஓவசியர் மாமா மாதிரி வாட்சுக் கட்டியிருந்தனானே நேரம் பார்க்கவும், உனக்கு எத்தனைக்கு வந்தார், எத்தனைக்குப் போனார் என்று பார்த்துச் சொல்லவும்."

என் மனதிலுள்ளதையெல்லாம் எப்படி இச்சிறுக்கி படித்தாள்.

"மனுஷன் பதியன் போட்ட ஒரு பலாக்கன்றையோ மாங்கன்றையோ கொண்டுவந்தால் அது ஞாயம், உனக்குப் பெருக்கனும் கொண்டுவந்து தர... அவர் உனக்கென்ன அங்காளி பங்காளியோ, சகலையோ சம்பந்தியோ... ஏனிப்பிடி லூஸன் மாதிரிக் கதைக்கிறாய்?"

"அப்ப ஓவசியர் கசிப்புப் போத்தல் கொண்டு வரேல்லையோ...."

"இஞ்ச ஒருத்தரும் ஒருத்தற்றை சொத்தையும் அள்ளவுமில்லை கிள்ளவுமில்லை,...ஒன்டும் கொள்ளை போகவுமில்லை. எல்லாம் அதது அந்தந்த இடத்தில பத்திரமாய் அப்பினாப்போல கிடக்குது. சும்மா வேண்டாததை நெனைச்சு வெம்பாமல் வெதும்பாமல் படு கண்ணா."

இப்போது அகவல்கள் அடங்க கொரட்டை கிளம்பிற்று. இனி அவனுக்குத் தூக்கம் வரும்.

பொ. கருணாகரமூர்த்தி **<karunah08@gmail.com>**

# பின்நகர்ந்த காலம்

## வண்ணநிலவன்


மகேந்திரன்

சமீபத்தில் மறைந்த திரைப்பட இயக்குநர் மகேந்திரன் குறித்து ஒரு நினைவு. அவர் இயக்கிய 'முள்ளும் மலரும்', 'உதிரிப்பூக்கள்', 'மெட்டி' ஆகிய மூன்று படங்களுக்கும் நான்தான் 'துக்ளக்' பத்திரிகையில் விமர்சனம் எழுதினேன். 'முள்ளும் மலரும்', 'உதிரிப்பூக்கள்' ஆகிய படங்களுக்கான விமர்சனங்கள் மகேந்திரனுக்கு அனுப்பி வைக்கப்பட்டு அவரிடமிருந்து பதிலும் பெறப்பட்டு பிரசுரமாகின. ஆனால், 'மெட்டி' பட விமர்சனத்தை ஆசிரியர் சோ என்னை நேரிலேயே கொண்டு போய்க் கொடுத்து பதில் வாங்கி வரச் சொன்னார்

'மெட்டி' பட விமர்சனத்தை டைப் செய்து எடுத்துக்கொண்டு சென்னை ராஜா அண்ணாமலைபுரம் ஐந்தாவது மெயின் ரோட்டில் (இந்த ரோட்டில்தான் புதுமைப்பித்தனின் மகள் தினசரி சொக்கலிங்கத்தின் வீடும் இருக்கிறது) இருந்த மகேந்திரனின் வீட்டுக்குக் காலையில் சென்றேன். அதைப் படித்துப் பார்த்த மகேந்திரன், "இருங்க ராமச்சந்திரன்...." என்று என்னை உட்கார வைத்துவிட்டு, "காபி சாப்பிடுவீங்களா, டீ சாப்பிடுவீங்களா?"



என்று கேட்டார். "எதுவானாலும் சரி" என்றேன். காபியோ டீயோ வந்தது. அதை அருந்திவிட்டுப் புறப்பட நினைத்தேன். "வரட்டுமா சார்?" என்றேன். "இருங்க ராமசந்திரன்... என்ன அவசரம்...?" என்று என்னை உட்கார வைத்துவிட்டார்.

சிறிது நேரம் கழித்து என்னை அவருடைய அம்பாஸிடர் காரில் ஏற்றிக்கொண்டு, நந்தனம் வீட்டுவசதி வாரிய குடியிருப்பில் இருந்த ஒரு வீட்டுக்கு அழைத்து சென்றார். அங்கும் மதியம் இரண்டு மணிவரை எங்களுடைய பேச்சு தொடர்ந்தது. பிறகு மீண்டும் ராஜா அண்ணாமலைபுரம் வீட்டுக்கே வந்தோம். தன்னுடன் என்னையும் சாப்பிடச் சொன்னார். சாப்பிட்டுவிட்டு சிறிது நேரம் இருந்தேன். மூன்று மூன்றரை மணி சுமாருக்கு அவரிடம் சொல்லிக்கொண்டு கிளம்பினேன். 'மெட்டி' விமர்சனத்தைப் பற்றி எதுவும் கூறாமல், சுருக்கமாக எழுதி, தனது பதிலை மகேந்திரன் அனுப்பி வைத்தார். எதற்காக அன்று மாலை வரை தன்னுடன் நீண்ட நேரம் என்னை இருக்க வைத்தார் என்பது இன்றுவரை எனக்குப் புரியவில்லை. எல்லா விஷயங்களுமா புரிந்துவிடுகிறது?


சிவசங்கரி


சாண்டில்யன்


புஷ்பா தங்கதுரை

நான் 1976 ஜூனில் 'துக்ளக்'கில் வேலைக்குச் சேர்வதற்கு முன்பும் அதன் பின்பும், 'துக்ளக்' தொடர்ந்து எழுத்து, சினிமாவில் உள்ள ஆபாசத்தையும், மீடியாவில் பரபரப்புக்காகச் செய்திகளை வெளியிடுவதையும் எதிர்த்து வந்தது. இன்றும்கூட இந்த நிலைப்பாட்டிலிருந்து 'துக்ளக்' தடம் புரளவில்லை. 'துக்ளக்'கில் வேலைக்குச் சேரும்போது, எனக்கு இந்த விஷயங்களைப் பற்றி எந்தக் கவனமும் அபிப்பிராயமும் இருந்ததில்லை. ஒரே சமயத்தில் இன்று போலவே எழுத்தாளனாகவும் பத்திரிகையாளனாகவும் அன்றும் செயல்பட்டு வந்தேன் என்பது தவிர, தனிப்பட்ட முறையில் எனக்கு மீடியாவிலோ அல்லது எழுத்துலகிலோ உள்ள ஆபாசம், செய்திகளைப் பரபரப்பாக்குவது குறித்து பெரிய அபிப்பிராயம் அன்று எனக்கில்லை. ஆபாசம், பரபரப்பு இரண்டையும் எதிர்ப்பது என்ற 'துக்ளக்'கின் (ஆசிரியர் 'சோ'வின்) நிலைப்பாட்டை நானும் காலப்போக்கில் ஏற்றுக்கொண்டேன். இதில் எந்தத் தவறுமில்லை.

இலக்கியம் எது, பத்திரிகை எழுத்து எது என்பதை ஓரளவு பிரித்துப் பார்த்து உணரத் தெரிந்து கொண்டதற்கு, அறுபதுகளில் எனக்கு அறிமுகமான முத்துக்கிருஷ்ணன் என்ற மார்க்சிய நண்பரும், பிறகு எனக்கு அறிமுகமான க.நா.சுவி.ன் 'இலக்கிய விசாரம்', 'படித்திருக்கிறீர்களா' நூல் தொகுதிகளும்தான் காரணம். முத்துக்கிருஷ்ணனைப் பற்றி இத்தொடரின் முதல் பாகத்திலேயே குறிப்பிட்ட நினைவு. 'கூறியது கூறல்' என்ற இலக்கியப் பிழையாக இருந்தாலும், இந்த இடத்தில் அதைத் தவிர்க்கத் தோன்றவில்லை. இவர்தான் எனக்கு வி.ஸ.காண்டேகரின் நாவல்களை அறிமுகம் செய்து வைத்தார். சுந்தர ராமசாமியின் 'பிரசாதம்' தொகுதியைத் தந்து படிக்கச் சொன்னார். அக்காலத்தில் தீவிர இடதுசாரி இதழ் என்று கூறப்பட்ட 'புதிய தலைமுறை' என்ற சிற்றிதழை அறிமுகம் செய்து வைத்தார். 'தாமரை', 'தீபம்' இதழ்களை அறிமுகம் செய்ததும் முத்துக்கிருஷ்ணன்தான்.

இந்த முத்துக்கிருஷ்ணனைத்தான் 'காலம்' என்ற நாவலில் பாலகிருஷ்ணன் பாத்திரத்தில் இணைத்தேன். இவர்தான் சென்ற ஆண்டு வெளிவந்த எம்.எல். நாவலில் வரும் சபாபதியும். முத்துக்கிருஷ்ணன் 'இதுதான் இலக்கியம்' என்று என்னிடம் என்றும் சொன்னதில்லை. ஆனால், அவர் அறிமுகப்படுத்திய எழுத்தாளர்களின் மூலம் அதை உணர்ந்தேன்.

'துக்ளக்' ஆசிரியர் சோவுக்கு நவீன இலக்கியத்தில் அறவே பரிச்சயமில்லை. அவர் தேவனின் வாசகர். ஆங்கில நகைச்சுவை எழுத்தாளர் ஓடோஸை அவருக்கு ரொம்பப் பிடிக்கும். பெக்கட்டின் நாடகங்கள் விருப்பமானவை. தமிழில் ஔவையாரையும் பிடிக்கும். 'பகீரதன்' என்ற எழுத்தாளரை ('கங்கை' என்ற பத்திரிகைக்கும், பிறகு 'ஓம்சக்தி'க்கும் ஆசிரியராக இருந்தவர். 'கல்கி' ஆசிரியர் குழுவிலும் சிறிது காலம் பணிபுரிந்தவர். இவரது 'தேன்மொழியாள்' என்ற நாடகத்தை 'சோ' ஆரம்பக் காலத்தில் நடத்தியிருக்கிறார்) அடிக்கடி நினைவு கூர்ந்திருக்கிறார். பாரதியாரைக் கொண்டாடுவார். பாரதியின் பாஞ்சாலி சபத வரிகள் பலவற்றை அப்படியே சொல்வார். குயில் பாட்டைப் பற்றி அவருடன் பேசியிருக்கிறேன்.

ஒருநாள் ஏதோ மனநிலையில், "பாரதி கஞ்சா சாப்பிட்டுவிட்டு 'மண்ணில் தெரியுது வானம்' என்று எழுதிவிட்டார்" என்று எடிட்டரிடம் சொன்னேன். பாரதியைப் பற்றி - அது உண்மை என்றாலும் - இப்படித் தரக் குறைவாகச் சொல்லியிருக்கக்கூடாது. வாய்த்துடுக்கு அப்படிச் சொல்வதில் போய் முடிந்தது. ஆனால், அதற்காக எடிட்டர் என்னிடம் கோபப்படவில்லை.

1950க்கள், 60களில் வெளிவந்த வாரப் பத்திரிகைகளின் தரத்திற்கும் 70களில் வெளிவந்த 'ஆனந்தவிகடன்', 'தினமணி கதிர்', 'குமுதம்' தரத்தும் வித்தியாசமிருந்தது. தினமணி கதிரின் விற்பனையை அதிகரிக்க அதன் ஆசிரியரான 'சாவி' என்ற சா. விஸ்வநாதன், ஸ்ரீ வேணுகோபாலனை 'புஷ்பா தங்கதுரை' என்ற புனைப்பெயரில் சிவப்பு விளக்குக் கதைகளை எழுத வைத்தார். (பம்பாயிலுள்ள


சாவி

சிவப்பு விளக்குப் பகுதி விபசாரத்தின் கேந்திரம்) இதற்குப் போட்டியாக விகடன், பிரேமா ராமசாமி என்ற பெயரில் வாரா வாரம் கதைகளை வெளியிட்டது. சாண்டில்யன் தனது சரித்திரக் கதைகளில், அடிக்கடி பெண் கதாபாத்திரங்களின் வனப்பை விரிவாக விவரிப்பதை வழக்கமாகக் கொண்டார். இதையெல்லாம் 'துக்ளக்' எதிர்த்தது.

சங்க இலக்கியத்தில்கூட பெண்களின் முலை பற்றிய சித்தரிப்பு யாராவது ஆண்பால் புலவரின் கவிதைகளில்தான் இடம்பெறுகிறது. பெண்களின் உடல் உறுப்புகளை விழுந்து விழுந்து வர்ணிக்கும் வழக்கம் இல்லை. போகிற போக்கில் கம்பராமாயணத்தில் வரும், திருக்குறளில்கூட ஆபாசமான சித்தரிப்பு இல்லை. பெண்ணின் உடலைப் போகப் பொருளாக, அதன் மீது ஆண் வாசகர்களும் சினிமா ரசிகர்களுக்கும் மோகம் ஏற்படும்படிச் செய்யும் போக்கு 1950கள் வரை இல்லை.

மேற்கத்திய எழுத்துலகில்கூட தாமஸ் ஹார்டி, சார்ல்ஸ் டிக்கன்ஸ், சாமர்செட் மாம் போன்ற பிரபலமான ஆங்கில எழுத்தாளர்களின் நாவல்களில் பெண்களை ஆபாசமாக சித்திரிக்கும் போக்கு இல்லை. ஆங்கிலத் திரைப்படங்களில் 50, 60களில் முத்தக் காட்சிகள் உண்டு. ஜேம்ஸ் பாண்ட் படங்களில் நீச்சலுடைக் காட்சிகள் இருந்தன. ஆல்பர்ட் ஹிட்ச்காக்கின் படங்களில் ஆபாசமே கிடையாது. ஸிஸில் பிடெமிலியின் 'பென்ஹர்', 'தி பைபிள்', 'டென் கமாண்ட்மெண்ட்ஸ்' போன்ற பிரமாண்டமான படங்களில் ஒன்றிரண்டு முத்தக் காட்சிகள் இருந்திருக்கலாமோ என்னவோ?

முதலில் பெண்ணுடலை வைத்து வியாபாரம் செய்ய ஆரம்பித்தது ஆங்கில பத்திரிகைகளில்தான். அமெரிக்க, பிரிட்டன் டேபுலாய்ட் பத்திரிகைகளில்தான் இது தொடங்கியது. இது எழுத்துலகிலும் அங்கு பரவியது. இர்விங் வாலஸ் போன்ற துப்பறியும் நாவலாசிரியர்களின் நாவல்களில் வெளிப்படையான உடலுறவு காட்சி வர்ணனைகள் ஒன்றிரண்டாவது போகிற போக்கில் விவரிக்கப்படும். இதைத் தமிழ்ப் பத்திரிகைகளில் தொடர்கதைகளை எழுதும் சிவசங்கரி போன்ற சில பெண் எழுத்தாளர்களே எழுதத் தலைப்பட்டனர். கல்கியிடமோ தேவனிடமோ, நா.பார்த்தசாரதி, அகிலனிடமோ ஆபாசமான, விரசமான சித்திரிப்புகள் இல்லை. ஆனால், சாண்டியல்யனின் பெண்ணுடல் வர்ணனைகள் விரசத்தைத் தொடுபவை. தமிழ் சினிமாவைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். கற்பழிப்புக் காட்சிகள், நடிகைகளின் தேவையற்ற ஜலக்கிரீடைக் காட்சிகள் தமிழ் சினிமாவில் சகஜம்.

1979 ஜூலை முதல் வாரத்திலேயே ஆங்கில, தமிழ் தினசரிகளில் ஒரு செய்தி பரபரப்பாக அடிபட்டது. அமெரிக்காவின் நாசா ஆய்வு நிலையம் 1973இல் வானில் நிலைநிறுத்திய 'ஸ்கைலாப்' என்ற விண்வெளி ஆய்வு மையம் செயலிழந்து, எப்போது வேண்டுமானாலும் கீழே விழலாம் என்ற தகவலைத் தமிழ் தினசரிகள் பெரிதுபடுத்தி, ஒரு பயத்தை மக்கள் மத்தியில் தோற்றுவித்தன. அப்போது அமெரிக்க ஜனாதிபதியாக இருந்தவர் ஜிம்மி கார்ட்டர். அவரும் 'ஸ்கைலாப்' பூமியில் விழுவது பற்றியும், அது எவ்விதச் சேதத்தையும் ஏற்படுத்தாமலிருக்கவேண்டுமே என்றுமே கவலைப்பட்டார்.

அந்த ஸ்கைலாப்பில் பல அமெரிக்க விண்வெளி வீரர்கள் தங்கியிருந்து சோதனைகள் எல்லாம் மேற்கொண்டிருந்தனர். 1974இல் இந்த ஸ்கைலாப்பை அமெரிக்கா கைவிட்டது. அது முற்றிலுமாகச் செயலிழந்து போனதால் அதைப் பத்திரமாக தரையிறக்கவும் வழியில்லை. அது எங்கே விழும் என்பதையும் கணிக்க முடியவில்லை. இதைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு தினசரிகள் பீதியையும் பல்வேறு கட்டுக் கதைகளையும் அவிழ்த்துவிட்டன. அது பூமியில் விழுவதாகக் கணிக்கப்பட்ட தினத்தில் மக்களெல்லாம் பயத்தில் வீடுகளுக்குள் ஒடுங்கிக் கிடந்தனர். சென்னை மவுண்ட் ரோட்டில் ஈ, காக்காய் கூட இல்லை. அது விடுமுறை நாளுமல்ல. மதியம் ஆசிரியர் சோவுடன் நாங்களும் மவுண்ட் ரோட்டிற்கு வந்து வெறிச்சோடிக் கிடந்த சாலையைப் பார்த்தோம். அப்படியொரு பீதியை மீடியா உலகம் தோற்றுவித்திருந்தது.

அந்த 'ஸ்கைலாப்' 12.7.79 அன்று ஆஸ்திரேலியாவிலுள்ள எஸ்பெரான்ஸ் என்ற சிறு நகரத்தில் துண்டு துண்டாக விழுந்து சிதறியது. எந்த உயிர்சேதமும் இல்லை. அந்த ஸ்கைலாப் ஆஸ்திரேலியாவில் விழுந்ததற்காக 400 டாலரை அபராதமாக அமெரிக்காவுக்கு விதித்தது. அந்த 400 டாலர் அபராதத்தை அமெரிக்க அரசு பல வருடங்களாகச் செலுத்தவேயில்லை. 2009இல்தான் கலிபோர்னியாவிலுள்ள ஒரு வானொலி நிலையம் அமெரிக்காவின் சார்பில் அந்த அபராதத்தைச் செலுத்தியது.

வண்ணநிலவன் **<ramachandran.u49@gmail.com>**

# உம்மாவின் திருக்கை மீன் வால்

பாத்திமா மாஜிதா

ஓவியம்: அமிர்தா ஷெர் கில்

பராமரிப்பு வழக்குத் தாக்கல் செய்வதற்காக வாகரையிலிருந்து அலுவலகத்திற்கு வந்த இரண்டு பெண்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும்பொழுதுதான் அந்த தொலைபேசி அழைப்பு அவளுக்கு வந்தது.

“உம்மாவுக்கு இரத்தப் போக்கு கடுமையாக இருக்கு. நேற்று பொலநறுவை அஜ்வத் டொக்டரின் ஆஸ்பத்திரிக்கு உசன் நானா கூட்டிக்கிட்டு போனாரு. ‘பதிமூன்று வருஷத்துக்கு பிறகு மீண்டும் மாதவிடாய் வந்திருப்பது உடம்பில் ஏதோ ஒரு பிரச்சனைக்கான அறிகுறி. முதலில் குடல் கழுவி பார்க்கணும்’ என அந்த வீ.ஓ.ஜி. டொக்டர் சொன்னாராம். பொலநறுவை ஆஸ்பத்திரிக்கி அவ்வளவு தூரம்போய் கஷ்டப்படுவதக் காட்டிலும் மட்டக்களப்பில டொக்டர் சரவணனிடம் செக் பண்ணிட்டு பயனியார் ஆஸ்பத்திரியில இந்த டெஸ்ட்ட செய்றது லேசு. வாப்பா அசையாம கல்லு மாதிரி இருக்காரு. எனக்கும் இந்தப் பிள்ளைகளோட திரியிறது கஷ்டம். இரண்டு நாள் லீவைப் போட்டுட்டு நீதான் வரணும்” என்று ஆற்றினை விடவும் வேகமாக ராத்தா கதைத்து முடித்தாள்.

“ம், வேலை கொஞ்சம் இரிக்கி, முடிச்சிட்டு பின்னேரம் வாரன்.” இருளில் நடப்பது போல் தயங்கி தயங்கி மெதுவாக கூறி போனை வைத்துவிட்டு மீண்டும் அப்பெண்களுடன் உரையாடலை தொடர்ந்தாள்.

அங்கே ஒருத்தியின் மடியில் இருந்த பெண் குழந்தைக்கு கரிய பெரும் விழிகள், அடர்த்தியான புருவங்கள், ஆட்காட்டி விரலை வாயில் வைத்து சுப்பியவாறே இவளையே பார்த்துக் கொண்டிருந்தது. அக்குழந்தையின் தந்தை, தாயுடன் ஏற்பட்ட தகராறில் வீட்டைவிட்டு வெளியேறி ஆறு மாதங்கள். அக்குழந்தையுடன் சேர்த்து இன்னும் மூன்று பிள்ளைகளை அந்தத் தாய் பராமரிக்க வேண்டும். ஆற்றில் வலை வீசி மீன் பிடித்து விற்றுத்தான் பிள்ளைகளின் வயிற்றுப் பசியை போக்குகிறாளாம். கணவன் ஓயாத குடி. ஆசிரியரிடம் பாடம் ஒப்பிப்பது போல அந்தப் பெண் தனது வாழ்க்கையின் ஒவ்வொரு அத்தியாயத்தினையும் எந்தவித பிசகலுமின்றி விவரித்துக் கூறினாள்.

இப்பொழுதெல்லாம் பராமரிப்பு, விவாகரத்து இத்தியாதி வழக்குகளின் கனம் அவளது மனதை நீண்ட நேரம் யோசிக்க வைக்காது. பல விளையாட்டுப் போட்டிகளில் சிக்குண்டு உதைபட்ட பந்தினைப்போல் அடுத்த வழக்கின் சம்பவத்திற்குள் அவள் நுழைந்து விடுவாள். அந்தக் கலந்துரையாடலின் முடிவில் ஒரு நீண்ட பெருமூச்சு மட்டுமே அவளிடமிருந்து வெளியேறியது.

“சரி வார செவ்வாய்க்கிழமை காலை எட்டரை மணிக்கு மட்டக்களப்பு நீதிமன்றத்தின் முன் வாசலில் வந்து நில்லுங்க. எப்படியும் வழக்கைப் போட்டு பராமரிப்பு தொகையை உங்கட கணவரிடமிருந்து எடுக்கலாம். தைரியமா போயிட்டு வாங்க.”

அப்பெண்களை வழியனுப்பி வைத்தாள். வழக்கின் தரவுகளை உதவியாளரிடம் பதியுமாறு கூறிவிட்டு பானுமதியை அழைத்து அடுத்த நாள் நடைபெறவிருக்கும் பெண்கள் கூட்டமைப்பின் கலந்துரையாடலுக்கான முன்னேற்பாடுகளை விவரித்துக் கொண்டிருந்தாள்.

இடையில் காயத்ரி குறுக்கிட்டு, “இன்றைக்கு அட்மின் லீவு. நாளைக்கு டயகோனியா நிறுவனத்திற்கு புதிய புரபோஸலை அனுப்ப வேண்டும். எதுக்கும் ஒரு தடவை உங்களை சரிபார்க்கச் சொல்லி வள்ளி மிஸ் போனில் பேசினா” எனக்கூறி தடித்த புத்தகமொன்றினை அவளிடம் நீட்டினாள். இன்னும் ஒரு மணி நேரத்தில் யூ.என்.டி.பி. ஆலோசகர் கூட்டத்திற்கு போக வேண்டும். அதோ இன்னும் இரண்டு பெண்கள் வாசலின் கதவினை தட்டுகிறார்கள், வீட்டு வன்முறை வழக்கு.

வயிறு பசியில் அடம்பிடித்தது. பக்கத்து வீதியில் இருந்த சன் சைன் பேக்கரியிலிருந்து மதிய நேரச் சாப்பாடு. சாப்பிட்டு முடிய நெதர்லாந்து பல்கலைக் கழகத்திலிருந்து இவளைச் சந்திப்பதற்காக வருகை தந்த பேராசிரியர்கள் இருவர். ‘போர்ச் சூழலில் பெண்களின் வன்முறை வழக்குகள்’ என்பதே அவர்களது பிரதான தலைப்பு. அவர்கள் ஒன்றரை மணி நேரத்தில் முடிவில்லாது பாதையைப் போன்று கேள்விகளை நீட்டி நீட்டி கேட்க இவள் ஸம் ஸம் கிணற்றினைப் போல விடைகளை சுரந்து தந்து கொண்டேயிருந்தாள். நேரம் பந்தையக் குதிரை போல் பறந்துகொண்டிருந்தது.

இன்னும் ஒரு மணி நேரத்தில் அவள் வேலையை முடித்து கிளம்பினால்தான் மட்டக்களப்பிலிருந்து நாலரை மணிக்கு புறப்படும் கடைசி சீ.ரி.பி. பஸ்ஸினை பிடித்துவிட முடியும். இல்லையெனில் இரவு ஒன்பது

மணிக்கு கொழும்பை நோக்கி செல்லும் ரயில்தான் இறுதி ஏற்பாடு.

அவசர அவசரமாக மின்னஞ்சலை திறந்து அனைத்திற்கும் பதிலிட்டாள். வழக்கு பதிவிட இனி யாராவது பெண்கள் வந்தால் கவனித்து எல்லாவற்றினையும் எழுதி வைக்க வேண்டும் என உதவியாளரிடம் கூறிவிட்டு பைசிக்களில் ஏறி மிதி த்தவாறு அவள் வசித்து வரும் வீட்டிற்கு கிளம்பினாள்.

மட்டக்களப்பு வீதியில்தான் அவள் வசித்து வரும் மாடி வீடு அமைந்திருந்தது. முற்றத்தில் வீட்டின் காவலாளர்களைப் போன்று கிளைகளைப் பரப்பி நிற்கின்ற இரண்டு கறுத்தக் கொழும்பான் மாமரங்கள். ஒரு பகுதியில் புற்களைப் பரப்பியிருந்த நிலத்தில் ஆட்சி செய்யும் அரசிகளைப் போல பெருமிதம் கொண்ட அந்தூரியம் பூக்களும் குரோட்டன்களும்.

முற்றத்தில் கீழ் பகுதியில் வீட்டின் சொந்தக்காரர்களும் மேலே இரு பகுதிகளாக பிரிக்கப்பட்டு ஒன்றில் இவளும் மற்றையதில் ஒரு ஆசிரியையும் வசித்து வந்தார்கள். ஒரு அறையில் புத்தகங்கள், வழக்குகளின் ஃபைல்கள். மற்றையது படுக்கை அறை. முன் ஹோலில் பிரம்பினால் நெய்யப்பட்ட கதிரைகளும் ஒரு சிறு மேசையும் குடியிருந்தன. சுபி பாடகியான ஆபிதா பர்வினின் பாடல்கள் அடங்கிய இறுவட்டுக்களை தாங்கிய சீ.டி பிளேயர் இவள் வேலை முடிந்து வருவதை எதிர்பார்த்த வண்ணம் முன் ஹோலின் மேசையில் அமர்ந்திருக்கும்.

வீட்டிற்கு வந்த கையுடன் வியர்வை படிந்திருக்கும் உடலை சில் என்ற நீரில் அலம்பிவிட்டு தொய்வான ஆடைகளை உடுத்துக்கொள்வாள். களைந்த ஆடைகளை உடனே கழுவத் தேவையில்லை, அவை இரண்டொரு நாட்கள் குளியலறையில் ஓய்வு எடுத்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிடுவாள். தனக்குப் பிடித்த இருக்கை முறையில் கால்கள் இரண்டையும் தூக்கி மடக்கி கதிரையில் வைத்து உட்கார்ந்துகொண்டு மாலைத் தேநீரையும் ஆபிதா பர்வினின் பாடல்களையும் ஒருங்கே சுவைப்பாள். அநேகமாக இரவு வேளைகளில் கீழ் வீட்டில் இருக்கின்ற வீட்டுச் சொந்தக்காரி கொத்துப் புட்டும் மீன் குளம்பும் கொண்டு வந்து கொடுப்பாள். இல்லாவிட்டால் ஒரு முட்டையை ஊத்தி மிளகாய், வெங்காயம் சேர்த்து பொரித்து சோற்றுடன் சேர்த்து சாப்பிட்டுவிட்டு நித்திரைக்குச் சென்றுவிடுவாள்.

நடுநிசியில் ஹெலிகாப்டர்கள் சுழன்று சுழன்று பறக்கும். படுவாண்கரை பகுதியில் நடைபெறும் இராணுவத்திற்கும் புலிகளுக்கும் இடையிலான சண்டையில் துப்பாக்கிகளின் சத்தங்கள் சாவு சாவு என்று சொல்வது போல அசைய ஆரம்பிக்கும். ஆர்ட்லரியும் செல் சத்தங்களும் சாவின் வேகத்தினை படிப்படியாக கூட்டுவது போல் முழங்கும். பின்னர் ஒரு மயான அமைதி. எத்தனை பேர் இறந்தார்கள் என்ற செய்தி காலையில் தெரிந்துவிடும் என்ற நம்பிக்கையில் மீண்டும் நித்திரை அவளை அணைத்துக் கொள்ளும்.

காலையில் அவள் எழுந்து தேநீருடன் புத்தகத்தினை எடுத்துகொண்டு சாவதானமாக பெல்கனியில் அமர்ந்துகொள்ளும்பொழுது அவளிடம் முதலாவது நலம் விசாரிப்பது மாமரத்தில் தங்கியிருக்கின்ற குயில்களும் காகங்களும்தான். பின்னர் நீதிமன்றத்திற்கு போவதாக இருந்தால் சாரி கட்டிக்கொண்டு ஆட்டோவில் கிளம்புவாள். இல்லையென்றால் சல்வாருடன் சைக்களை மிதித்தவாறு நிறுவனத்திற்கு சென்றுவிடுவாள்.

எந்தவித கேள்விகளையும் சுமக்காத அவள் விரும்பியபடியே ஒரு வாழ்க்கை. தனக்குப் பிடித்தமான பாடலை தானே பாடி நடனமாடும் அற்புத தருணங்கள். அவளுக்கு அவள்தான் ராணி. அந்தப் பூரிப்பின் உச்சியில் அவள் நிற்கும்பொழுது எவரெஸ்ட் மலை யிலிருந்து பூமியைப் பார்க்கின்ற அதிசயம் போன்று அவளது உணர்வுகள் நீர் வீழ்ச்சியாக மாறி நுரைத்துக் கொண்டிருக்கும்.

இதுவே இவளது சொந்த வீட்டில் என்றால் எல்லாம் தலைகீழாகத்தான் நடக்கும்.

அவளுக்கான சுதந்திரக் காற்று வீட்டிற்கு வெளியேதான் வீசிக் கொண்டிருந்தது. வீட்டினுள்ளே இருந்த தளைகள் அவளை நெருக்கிப் பிடித்து உக்கிரப் பிரவாகமெடுக்கச் செய்தன. பாதணிகளை கழற்றிவிட்டு உள்ளே நுழைவது போல் தனது சுதந்திர இறகுகளை முறித்துவிட்டு வீட்டிற்குள் நுழைவாள். கேள்விகளை கோர்த்த சாட்டை எப்பொழுதும் அவளது வருகையை எதிர்பார்த்து காத்திருந்தது. வேலையை முடித்துவிட்டு பஸ்ஸிலேறி இருக்கும்பொழுதே இன்று வீட்டில் என்ன நடக்குமோ என்ற பீதி அவளைச் சுற்றிக்கொள்ளும்.

உம்மாவின் அறையின் சுவரில் தொங்கிக் கொண்டிருக்கும் திருக்கை மீன் வால் அவளது மனத் திரையில் ஓடி வந்து பயமுறுத்தும். மரம் அறுக்கும் அரம் போல் சொர சொரவென்ற திருக்கை மீன் வாலின் தோலின் மேல் நல்ல பாம்பின் கழுத்தில் இருக்கின்ற வளையம் போன்று உருண்டைகள் ஒட்டியிருக்கும். அவளுக்கு வயது தெரிந்ததிலிருந்து தண்டனை என்ற பெயரில் அவள் மீது ஒவ்வொரு தடவையும் வாப்பா நிகழ்த்தும் வன்மப்போரின்பொழுது இந்த இராட்சத உருவம் கொண்ட திருக்கை மீன் வால் இவளைப் பார்த்து சிரிக்கும். திருக்கை மீன் வால் வீட்டில் இருப்பது அவளுக்கு எரிச்சலை உண்டாக்கியது. ஆனால், அந்த வாலினை சுவரிலிருந்து கழற்றி வெளியே வீசுவதற்கான இயலாமை அவளிடம் இழைந்து கொண்டிருந்தது.

"இந்த மீன் வால் எதுக்கு கொழுவி வெச்சிருக்கீங்க? வெளியே வீசுங்க" என உம்மாவிடம் வெள்ளந்தியாக விண்ணப்பித்தாள்.

"அடியேய், ராவில களவெடுக்க வார கள்ளனுகளுக்கு விதானைமார் திருக்கை மீன் வாலாளதான் அடிப்பாங்க. றப்பர் மரத்தின் நாரைக் கிழிச்சா றப்பர் பால் வலியிற மாதிரி இந்த வாலாள அடி விழும்போது உடம்பின் தோல் உரிஞ்சி ரத்தம் பீரிடும். வீட்ட ராவையில யாராவது களவெடுக்க வந்தா இந்த மீன் வாலை கண்டு அடி வாங்குற பயத்தில ஓடிடுவானுவள்" என உம்மா கூறினாள். இருந்தாலும்

அவளது மனம் சமாதானப்படவில்லை.

வாப்பாவுக்கு இவள் மீது எழும் கோபத்தில் தன் பார்வையில் படுகின்ற பொருட்களை எடுத்து இவள் மீது வீசுவார். அல்லது தனது இடுப்பில் இருக்கின்ற பெல்ட், குசினியில் கிடக்கின்ற அகப்பை, வாசலில் நிற்கின்ற மரங்களின் தண்டுகள், என இவளது மேனியை உருவி எடுப்பார். இந்த வரிசையில் திருக்கை வாலும் வாப்பாவின் கைகளில் சிக்கினால் என்னாவது? என்ற படபடப்பு அவளினுள் ஆழமாக வேரூன்றி இருந்தது. அதன் விளைவுதான் இப்படி ஒவ்வொரு நாளும் வேலை முடித்து வீடு திரும்புகையில் ஏற்படும் பதட்டம்.

மனதை ஒரு முகப்படுத்த பிரயத்தனம் செய்வாள். தன்னைக் குறித்த மன வலிமையும் எல்லாரையும் போல் நானும் ஒரு மனிதப் பிறவிதானே என்ற நுண்ணுணர்வு பேரிரைச்சலோடு ஒரு சேர வந்து அவளைச் சூழ்ந்து கொள்ளும். போர் புரிவதற்கு புறப்படும் வீரர்கள் போன்று தன்னை நோக்கி வர இருக்கின்ற எதிர்ப்பலைகளை எதிர்கொள்வதற்காக தயாராகிக் கொண்டிருப்பாள்.

பஸ்ஸிலிருந்து இறங்கி ஆட்டோ பிடித்து வீடு போய்ச் சேரும்பொழுது நன்றாக இருட்டி விடும். மெல்லிய மெழுகுதிரியின் வெளிச்சத்தினைப் போன்ற வெளுவெளுத்துப் போன உம்மாவின் முகம் வாசலில் நின்று இவளை வரவேற்கும். வாப்பா இவளை வெறித்தபடியே பார்த்துக் கொண்டிருப்பார். ஈரமான அவருடைய கண்கள் பளிங்கு போல் மின்னும். அந்தப் பார்வை ஆயிரமாயிரம் கேள்விகளை அவள் மீது வீசுகின்ற அக்னிப் பார்வை. அவை நிராயுதபாணியாக நிற்கின்ற இவளை அப்படியே பொசிக்கி விடும். நிலத்தில் புதையுண்ட கண்ணிவெடியில் கால் படாமல் நடப்பதுபோல் மிகவும் சிரத்தையுடன் கால்களை அடியெடுத்து வைத்து அவளது அறையினுள் செல்ல எத்தனிப்பாள்.

ஆனால், ஏற்கனவே திட்டமிட்டபடி இப்படியொரு நேரத்தினை எதிர்பார்த்திருந்தது போல், "ஏன் லேட்டாகி வாராய், அப்படி என்ன வேலை?" போன்ற கேள்விகளை வாப்பா ஆரம்பிப்பார்.

தன்னுள் புதைந்திருந்த சக்திகளை ஒன்று திரட்டியவளாய், "நேரத்துக்கு வேலைய முடிக்க நான் என்ன கடையில பிஸ்னஸா பன்னுறன்? பொம்புள புள்ளயென்றா மட்டும் நேரத்தோட வீட்ட வரணுமா?" என தனது மனக் கிடங்கில் அமர்த்தியிருந்த பதில்களை சாமர்த்தியமாக வெளியே எடுத்து வீசுவாள்.

அவளது சொற்களின் கனதி அவரை திணரவைக்கும். பின்னர் என்ன? எவ்வளவு தூரம் இருவரும் பயணிப்பார்கள் என்று கூறமுடியாது. விட்டுக்கொடுக்காத ஒரு அறமற்ற போர் அங்கே நடைபெறும். பெற்றாருக்கு எதிர்த்து பேசுவது எவ்வளவு பெரிய பாவம் என்ற இஸ்லாமிய விழுமியத்தினை வாப்பா எடுத்துப் போடுவார்.

"ஏன் பிள்ளைகள் மீது அன்பு செலுத்துமாறு இஸ்லாம் கூறவில்லையா?" என்ற இவள் பதிலளிப்பாள். பின்னர் இறுதியாக அதிகாரம் பளபளக்கின்ற கூர்மையான ஆயுதம் போன்ற அந்தக் கைகளால் பளார் பளார் என்ற அறை இவளது கன்னங்களை பதம் பார்க்கும். ஆழ் மனதின் இடுக்குகளில் அப்பிக் கொண்டிருந்த மனக்காயங்கள் அவளது உடலில் விழுந்த அடியின் வலியில் கரைந்து நீர்ச்சுவாலைகளாக வெளியேறும். வீரிட்டு அழுவாள்.

"எனக்கி ஏன் அடிக்கிறீங்க? இப்படி அடிக்க யார் உங்களுக்கு உரிமை தந்தா?" போன்ற வசனங்கள் அவளது அழுகைக்குரலின் இடையிடையே குறுக்கிட்டு கொள்ளும்.

அவளது கேள்விகளுக்கும் கோரிக்கைகளுக்கும் யாருமே செவி சாய்ப்பதில்லை. மூர்க்க குணம் நிறைந்த காளை மாட்டை கயிறுபோட்டு நிலத்தில் வீழ்த்துவதைப் போன்று அவளது இயக்கங்களை அடக்குவதற்கான பிரயத்தனங்களை உம்மாவும் வாப்பாவுடன் சேர்ந்து நிறைவேற்றுவாள்.

"அடியேய் பொம்புள புள்ளயின் அழுகைக் குரல் இரவில வெளியே வருகுது. வாயை மூடு. சனங்களெல்லாம் ரோட்டுல நின்று புதுனம் பார்க்குது. வாப்பாவிற்கு எதிர்த்து பேசுறத்தை முதலில் நிப்பாட்டு" என்று உம்மா தீர்ப்பு வழங்குவாள்.

தீர்ப்பின் இறுதிக்கட்டத்தில் தண்டனையை விபரிப்பது போல், "உன்னப் போல பொம்புள புள்ளயொன்ற படிப்பிக்க வெச்சத போல பெரிய பிழை வேறொன்றுமில்லை" என்ற வாசகம் உம்மாவிடமிருந்து வெளியேறும்.

நாட்கள் நகர்ந்து செல்ல செல்ல இந்த வாசகத்தின் வேகம் அதிகரிக்க வீட்டினை விட்டு கிளம்பிவிட்டாள். "எப்ப சரி, நான் யார் என்பத உங்களுக்கு நிரூபிப்பன். அதுவரைக்கும் வீட்ட வரமாட்டன்" என்ற வரிகளை சுமந்த கடிதமொன்று வாப்பாவுக்கும் உம்மாவுக்கும் முன்னால் வந்து சபதமிட்டு நின்றது. "எத்தனை நாளைக்கு அவ தனியா இருக்கப் போறான்டு பார்ப்பம், எப்படி சரி வருவா" என தமது மனதை தேற்றிக் கொண்டார்கள்.

வாப்பா போல் இல்லை உம்மா. அவசர அவசரமாக பெய்து மண்ணில் கிடக்கும் புழுதியை கரைத்துவிட்டு அமுங்கிவிடும் கோடை மழையைப் போல் இவள் மீது எழும் உம்மாவின் கோபம் அடங்கிவிடும். சற்று நேரத்தில் அன்பு கலந்த மெல்லிய ஒளி முகத்தில் படர்ந்துவிடும். அந்த மாடி வீட்டின் அறையில் அவள் தனியாக தூங்கும்பொழுது எங்கேயோ ஒரு மூலையில் சுருண்டு கிடந்த உம்மாவின் ஞாபகங்கள் கண்கள் முன்னால் வந்து அவளது தலையை வருடிக் கொண்டிருக்கும். உடனே உம்மாவுடன் போனில் பேசுவாள். "நீ வருவாய் எண்டு ஒவ்வொரு நாளும் ஒரு சுண்டு அரிசியை சேர்த்து ஆக்கி வெச்சிட்டு இஷா நேரம் வரையும் காத்துட்டு இருக்கன். உனக்கு எப்ப லீவு கிடைக்கும். கோழி மிதிச்சு குஞ்சு சாகாதுடி" என்ற உம்மாவின் வார்த்தையில் இவள் உடைந்துவிடுவாள். உடனே உம்மாவைப் பார்க்க வேண்டும் என அவளது மனது சஞ்சலப்படும்.

சனி, ஞாயிறு தினங்களில் சிலவேளை வீட்டிற்கு செல்வாள். இவளைக் கண்டதும் உம்மாவுக்குள் மண்டி

யிட்டுக்கிடந்த பித்து கரைந்துவிடும். இவளுக்கு பிடித்த விறால் கருவாட்டுக் கறியும் சூடை மீன் போட்டு முருங்கையிலைப் பாலாணமும் இறைச்சிக் கறியும் புளியாணமும் நெத்திலி பொறியலும் பருப்புக்கறியும் என சோடி சோர்த்து சமைப்பாள். காஞ்ச மாடு கம்பில விழுந்த மாதிரி இவள் விழுந்து விழுந்து சாப்பிடுவாள். காலையில் எழும்பும் பொழுது தேநீரையும் மொறுமொறுவென்று திகட்டும் பாலாப்பத்தையும் இவள் கையில் நீட்டுவாள்.

ஆனால், விருந்தும் மருந்தும் மூன்று நாள் என்பது போல அந்த வீட்டில் நீண்ட காலம் அவளால் தங்க முடியாது. இவளும் அவர்கள் எதிர்பார்க்கின்ற கோட்டில் காலை வைக்கமாட்டாள். அவளது உலகத்திற்குள் யாரும் நுழைவதற்கு விரும்புவதுமில்லை. "குளிச்சு முடிஞ்சா பாத்ரூமில கழட்டிப்போட்ட உடுப்பை கழுவு, காலை அகட்டி கதிரையில் இரிக்கப்போடாது, வெளியே போகும் பொழுது தலையை மூடிட்டு போ" போன்ற ராகங்களை உம்மா மெட்டு எடுத்து பாட ஆரம்பிப்பாள்.

"எத்தன நாளைக்குத்தான் நான் உன்ன வெச்சிட்டு காலம் கடத்துறது? கலியாணத்தின முடி என்றாலும் கேக்கிறாயில்ல... உன்னைப் படிப்பிச்சப் போல பெரிய பிழை வேறெதுவும் இல்லை....." என்ற வார்த்தை மறுபடியும் எதிரொலிக்கும். இறுதியாக திருக்கை மீன் வால் ஞாபகம் எதிரே தோன்றி அவளது கழுத்தினை நெறிக்க எத்தனிக்கும். அதற்குள் மட்டக்களப்பு பஸ்ஸிலேறி அவளது கூட்டிற்கு பறந்துவிடுவாள்.

ஒரு முறை உம்மாவும் வாப்பாவும் மட்டக்களப்பிற்கு வாப்பாவின் நண்பரொருவரை சந்திக்க வந்தபொழுது இவளையும் பார்க்க இவள் தங்கியிருக்கும் மாடி வீட்டிற்கு வருவதாக அறிவித்திருந்தார்கள். தனியே வாழ்வதை மதித்து, தான் தங்கியிருக்கும் வீட்டிற்கு வருகின்றார்களே என்ற பூரிப்பில் திளைத்திருந்தாள். வீட்டினை கூட்டி துப்பரவாக்கி அலங்கரித்தாள். வீட்டின் தரையினை நீர் தெளித்து துடைத்துக் கொண்டிருக்கும்பொழுது அதன் மேல் படிந்திருந்த அழுக்குகள் கரைந்து செல்வது போல் உம்மா - வாப்பா மீதிருந்த வெறுப்பும் கோபமும் அவள் மனதிலிருந்து கரைந்துகொண்டிருந்தது.

ஆனால், பெற்றோர்கள் அவள் மீதிருந்த அன்பினைவிட எங்கே, எப்படி தங்கியிருக்கிறாள் என்பதை மோப்பமிடுவதற்காகவே வீட்டினுள்ளே நுழைந்தார்கள். இவள் முகத்தில் இருந்த பொலிவுக்கு எதிர்மறையாக அவர்களது முகங்கள் கீழே விழுந்து விடுமளவு அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருந்தன. வீட்டிற்கான வாடகை எவ்வளவு? யார் யார் இங்கே வருகின்றார்கள்? போன்ற சிக்கெடுக்க முடியாத கேள்விகள் கொத்தாக வந்து அவள் முன் விழுந்தன. அவளும் இடறி விழாமல் பதிலளித்தாள். வீட்டினை சுற்றி காட்டி தேநீர் தயாரித்து இருவருக்கும் வழங்கினாள். தேநீரைப் பருகிக் கொண்டிருக்கும்பொழுது வாப்பாவின் முகம் தேநீர் சாயம் போல சிவந்து கொண்டு வந்தது.

"பொம்புள புள்ளயொன்று இப்படி வீட்டில தனியே இருந்தா ஆயுதம் தூக்கிக்கொண்டு திரியிற எவனாலும் வந்து ஒரு ராவைக்கு கற்பழிப்பிச்சுப் போட்டு போவான்" என்று கூறியது கூறி முடிப்பதற்குள் ஊசியொன்று காதில் ஏறுவது போல் இவளை வலிக்க வைத்தன.

"ஏன் வாப்பா என்ட குண்டியிலதான் என்ட பாதுகாப்பும் இருக்குதா?" என்று கேட்டுவிட்டாள்.

அவரை அறியாமலேயே பேரதிர்ச்சியிற்கு உள்ளாக்கிய அந்த கேள்வியில் ஒரு கணம் ஸ்தம்பித்து போயிருந்தார். பின்னர் திடீரென அவர் தேநீர் குடித்துக் கொண்டிருந்த கோப்பை விழுந்து நொறுங்கியதுபோல் 'சளார்' என்றொரு அறை இவளது கன்னத்தில் விழுந்தது.

"இதுக்குத்தானா வந்தீங்க, வெளியே போங்க" என்று கத்தினாள்.

"எவ்வளவு தைரியம் இருந்தா வாப்பாவை பார்த்து இப்படியாரு கேள்வி கேட்பாய், உன்ன படிப்பிச்சதப்போல பெரிய பிழை ஒன்றுமில்ல" என்ற உம்மாவின் வாசகம் மீண்டும் எழுந்து நின்றது.

தாம் திட்டமிட்ட படியே எல்லாம் நடைபெற்றன என்று திருப்தியில் அவர்கள் போய்விட்டார்கள். அடிச்ச அடி மாறினாலும் கதைச்ச கதை மாறாது என்பார்களே, அப்படி இவளுக்கு அந்த சம்பவம் ஒவ்வொரு நாளும் மனதை அரித்துக் கொண்டிருந்தது. அதிலிருந்து இவள் வீட்டுப் பக்கமே போவதில்லை.

மட்டக்களப்பு பஸ் நிலையத்தில் சீ.ரி.பி. பஸ் புறப்படுவதற்கு அறிவிப்புச் செய்வது போல் சினுங்கியபடி இருந்தது. ஆட்டோவில் இருந்து இறங்கியவள் பஸ் நிலையத்திற்கு முன்னால் உள்ள பார்மஸியில் உம்மாவுக்கு அயன் டார்னிக் சிரப்பினை வாங்கிக்கொண்டு அவசரமாக பஸ்ஸிலேறிக் கொண்டாள். வழமையாக இவள் ஊரிற்கு பஸ்ஸில் பிரயாணிக்கின்ற சந்தர்ப்பங்களில் பரீட்சைக்கு தயார் செய்வது போல் சில கேள்விகளுக்கு தயார் செய்துகொண்டுதான் இருக்கையில் அமர்ந்துகொள்வாள். ஏனெனில், இவளது முகம் வெற்றிலை வடிவான வாப்பாவின் முகத்தினை போல குழி விழுந்த கண்களும் அகன்ற மூக்கும் என்பதால் இவள் யாருடைய மகள் என்பதை பிரயாணிக்கின்றவர்கள் இலகுவாக அறிந்துகொள்வார்கள்.

"இந்த நேரத்தில் எங்கே போயிட்டு வாராய்? தனியாக வந்தாயா? என்ன வேலை செய்கிறாய்?" போன்ற கேள்விகளைச் சுமந்த முகங்கள் இவளினை எதிர்பார்த்து பஸ்ஸினுள்ளே அமர்ந்திருக்கும். அப்படி யாராவது அவளுடன் பஸ்ஸிலேறிக் கொண்டால் அவளது பாடு அவ்வளவுதான். இவளுக்கு முஸீபத் இறங்கிவிட்டது என்று ஊகித்துக்கொள்ளலாம். சோதனைச்சாவடிகளில் பொலிஸ்காரர்கள் கேட்கின்ற கேள்விகளைப் போன்று இவளது பொறுமையை அத்தகைய கேள்விகள் சோதித்துக்கொள்ளும்.

அன்று வழமைக்கு மாறாக அவளுக்கு தெரிந்தவர்கள் யாரும் அந்த பஸ்ஸில் இருக்கவில்லை. அவளுக்கு மிகப்பெரியதொரு நிம்மதியாக



இருந்தது. இருக்கைகள் எல்லாம் நிரம்பி வழிந்தன. சிலவேளைகளில் இடையே யாராவது இறங்கினால் இவளுக்கு இடம் கிடைக்க வாய்ப்பு உண்டு. தூக்கிலிடப்பட்ட கைதியைப் போல பஸ்ஸின் மேல் கம்பியைப் பிடித்துக்கொண்டு தொங்கினாள். ஊறணியை அடைந்ததும் இருவர் இறங்க ஜன்னலின் அருகே இவளுக்கு இருக்கையொன்று கிடைத்தது. வழியிலிருந்த எல்லா சோதனைச் சாவடிகளும் ஐந்து மணி தாண்டிவிட்டதால் மூடிவிட்டார்கள். வெளியே வீசிய காற்று முகத்தில் தெறித்து குளிர்ச்சியூட்டியது. தான் அமர்ந்திருந்த இருக்கைக்குப் பக்கத்தில் உள்ள ஜன்னலினை அகல திறந்து வெளியே கண்களை பதிய விட்டாள்.

"அப்பா ஏன் அந்த கொக்கு குளத்தில தனியா நிக்குது? அதன்ட அப்பா, அம்மாவெல்லாம் எங்கே?" என்று கேள்விகளை அவளது அப்பாவிடம் கேட்டவாறு இவளுக்கு பின்னால் இருந்த இருக்கையில் சிறுமியொருத்தி அமர்ந்திருந்தாள். "அவங்க இந்த குட்டி கொக்குக்கு சாப்பாடு தேடி போயிருப்பாங்க" என்று அவளது அப்பா விடையளிக்க, மீண்டும் அந்த சிறுமி முத்தும் பவளமும் சேர்த்து கோர்ப்பது போல ஒவ்வொரு கேள்வியையும் கேட்டுக்கொண்டு வந்தாள். இவளும் அந்த வயதில் வாப்பாவிடம் கேள்விகளை எறிந்து விடைகளில் விழுந்த வண்ணம் எத்தனையோ அர்த்தமுள்ள பயணங்களை மேற்கொண்டவள். பஸ், ரயில், சைக்கிள் என வாப்பாவுடன் சென்ற பயணங்கள், இங்கேயிருந்துதான் நீ வாழ்க்கையை எழுப்ப வேண்டும் என்று அவளுக்கு அறைந்து கூறின. மனிதர்களுக்கும் மனிதர்களுக்குமிடையிலான போராட்டத்தில் துணிவு, தன்னம்பிக்கை, மனிதநேயம் என வாழ்க்கையின் அட்சரங்கள் அனைத்தையும் அவள் கற்றுக்கொண்டது வாப்பாவுடன் சென்ற பயணங்களில் இருந்துதான்.

ஆனால், இன்று அவள் தனித்த யாத்திரிகராக மாறிவிட்டாள். அவளுடைய பயணத்திற்கு இலக்கு உண்டு. பறவையின் கண்களைப்போன்று அவளது பயணம் எதையாவது தேடிக்கொண்டேயிருக்கும். அமெரிக்காவின் சிறைச்சாலையிலிருந்து அவுஸ்திரேலிய பழங்குடிகள் வரை அவளது இலக்கு விரிவடைந்திருந்தது. டெல்லியில் கமலா பாஸின், பாகிஸ்தானில் ஹினா ஜிலானி, பங்களாதேஷில் குஷி கபீர் என ஒவ்வொரு பெண்களையும் அவள் சந்தித்து திரும்புகையில் தன்னைத்தானே செம்மைபடுத்திக் கொண்டேயிருந்தாள். கால ஓட்டத்தில் அவள் ஒரு தனித்த ஒளிப்பந்து. தன்னைச் சுற்றியிருப்பவர்களை நோக்கி புதிய சிந்தனைகளை பாய்ச்ச விரும்பினாள். ஆனால், அவளது பெற்றோர்கள் அவளை நாட்டுக்கு நாடு சுற்றி வரும் தேசாந்திரியாக நினைத்தார்கள்.

'காரியாலய வேலைக்காக வெளிநாட்டுக்கு போயிருக்காள்' என ஊரிலுள்ளவர்களிடம் பிரலாபித்துக் கொள்வார்கள். அவள் ஊர் திரும்பும்பொழுது அவளுக்கு கிடைக்கும் பொக்கட் மணியில் சொக்லட் வாங்கி வருவாள். ஆனால், வாப்பாவின் எதிர்பார்ப்பு விலை மதிப்புள்ள ஒரு கமரா அல்லது லெப்டப் ஆக இருக்கும். அவருடைய எதிர்பார்ப்புக்கும் அவளுடைய இலட்சியத்திற்கும் இடையே விரிசல் ஏற்படும்பொழுது தான் புரளியே வெடிக்கும். இறுதியில் "உன்னைப் படிப்பிக்க வச்சதைப்போல பெரிய பிழை ஒன்றுமில்ல" என்ற வார்த்தை அவளை கபளீகரம் செய்யும்.

ஆட்டோ முன் வாசலில் தரித்து நின்றபொழுது நன்றாக இருட்டியிருந்தது. மின் குமிழ்கள் ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன. உம்மாவின் முகத்தில் அமைதி கவிந்திருந்தது. உம்மாவின் அகன்ற விழிகளில் கண்ணீரும் கலவரமும் நிறைந்திருந்திருந்தன. வெந்நிறமான உம்மாவின் முகம் வழமைக்கு மாறாக சற்று மஞ்சள் கலந்த நிறமாக மாறியிருந்தது. இறந்தகால சம்பவங்கள் அனைத்தையும் மூட்டை கட்டி வைத்துவிட்டு சிறியதொரு புன்னகையை உதட்டில் தவள வைத்தாள்.

சொற்களை ஒன்று திரட்டி, "இப்ப எப்படி இரிக்கிம்மா? இரத்தப்போக்கு இன்னும் போகுதா?" என்று கேட்டாள்.

"ஓம், ஒவ்வொரு மணித்தியாலமும் புடவையை மாத்திக்கிட்டு இருக்கன். ஏன் இப்படி திடீரென்று ஏற்பட்டிச்சு எண்டுதான் யோசனையா இருக்கு" என்ற உம்மாவின் வார்த்தைகள் வலியுடன் சேர்ந்து வெளியேறின.

அவசரமாக அயன் மருந்துப் பெட்டியை உடைத்து இரண்டு தடவைகள் மருந்தை கரண்டியில் ஊற்றி உம்மாவிடம் குடிக்க கொடுக்கும்பொழுதே, "நாளைக்கு காலையில பயனியார் ஆஸ்பத்திரிக்கு போக ஆறு மணிக்கெல்லாம் வேன் வந்துடும், ரெடியா இரிங்க" என்று கூறிவிட்டு உள்ளே சென்று குளித்து ஆடைகளை மாற்றிக்கொண்டு உம்மா சமைத்திருந்த மரவள்ளிக் கிழங்கும் சுங்கான் கருவாட்டு சொதியையும் சோற்றுடன் சேர்த்து சாப்பாட்டு விட்டு நித்திரைக்குச் சென்றாள்.

அன்றைய இரவு நீண்டு கொண்டிருந்தது. வானத்தில் விழித்திருக்கும் நட்சத்திரங்களுடன் சேர்ந்து அவளும் விழித்திருந்தாள். உம்மாவின் உடல்நலத்தினைப் பற்றி எந்தவித பிரக்ஞையுமின்றி உறங்கிக் கொண்டிருக்கும் வாப்பாவின் குறட்டை ஒலி அறையினுள் ஒலித்துக் கொண்டிருந்தது. இடையிடையே உம்மா நடமாடுவதும் கழிவறைக்குள் எழுந்த தண்ணீர் சத்தமும் அவளது நித்திரையை

தட்டி எழுப்பின. ஏதோ நடக்கப் போகுது என்ற இனம்புரியாத பயத்தினை அவளது போர்வையுடன் சேர்த்து போர்த்திய படி கட்டிலில் அமர்ந்திருந்தாள்.

வாழ்வின் அநித்தியத்தினை கூறும் அந்தப் பயணத்திற்கு பிரியாவிடை தெரிவிப்பது போல் சாலையின் இரண்டு பக்கத்திலிருக்கும் மரங்களின் இலைகள் அசைந்து கொண்டிருந்தன. அந்தப் பயணம் உம்மாவின் வாழ்க்கை என்ற புதையலை தேடுவதற்கான பயணம் போல் அவள் மனதில் பிரளயத்தினை உண்டு பண்ணிக் கொண்டிருந்தது. முந்திய நாள் மட்டக்களப்பு பயனியார் வைத்தியசாலையில் வைத்து டாக்டர் அவளிடம் கூறிய விடயங்கள் குமிழியிட்டுக் கொண்டிருந்தன.

“உங்களுடைய அம்மாவிற்கு கருப்பைக் குழாயில் கென்ஸர் ஏற்பட்டிருக்கு. டீ.என்.ஸி. டெஸ்ட் செய்த பொழுது உள்ளேயிருந்த கிருமித் துகள்கள் செதில்கள் போல வெளியே கொட்டிப் படுகுது. அதனால் இது கென்ஸரின் கடைசிப் படிநிலையாகக்கூட இருக்கலாம். நீங்க அவசரமாக அவவை மகரகம புற்றுநோய் வைத்தியசாலைக்கு கொண்டு போகணும்” என்று டொக்டர் கூறி முடிக்க முன்பே,

“உம்மா…ஆ ஆ…” என்ற நீண்ட ஒலி அவளது நெஞ்சத்தின் ஆழத்திலிருந்து அலை அலையாய்ப் பொங்கி வழிந்து கொண்டிருந்தன. வானத்தில் இருந்த வால் நட்சத்திரமொன்று பூமியில் விழுந்து நொறுங்கிய கனமொன்று போல அவளது மனம் சிதைவுற்றது.

அவள் ஒரு சில காலம் வாழ்ந்த அதி உன்னதமான இடம் அந்தக் கருப்பை. “ஐந்து மரைக்கால் நாட்டு அரிசியை அவிச்சி காயவெச்சி அரிசி ஆலைக்கு அனுப்பிப்போட்டு அரை மணி நேரத்துக்குள்ள ஆஸ்பத்திரிக்கு போய் உன்ன நான் பெத்தேன்டி. எல்லோருமே என்ட பிலத்த நினச்சி பெருமையா பேசினாங்க” என்று தனது கருப்பையின் வலிமையை பற்றி உம்மா அடிக்கடி அங்கலாய்த்துக் கூறுவதை நினைத்துப் பார்க்கும்பொழுது மடையைக் கிழித்துக் கொண்டு வந்த வெள்ளமாய்க் குமுறினாள். வேனிற்குள் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்த உம்மாவை உற்று நோக்கினாள். ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத கற்பனைகள் அவளை உலுக்கிக் கொண்டிருந்தன. ஏகமாய் இளமை பொலிந்திருந்த உம்மாவின் முகம் இப்பொழுது மட்டை தொங்கியவாறு அந்திமகாலத்தில் இருக்கின்ற தென்னை மரம் போன்று முதுமையடைந்திருந்தது.

வீட்டிலிருந்து மகரகம வைத்தியசாலையை நோக்கி வேன் புறப்பட்டு மூன்று மணித்தியாலங்கள் கழிந்துவிட்டன. ஆனால், அவளுடைய நினைவுகள் மட்டும் வீட்டிலிருந்து புறப்பட முன் நடைபெற்ற நிகழ்வுகளைச் சுற்றி சுற்றி நின்று கொண்டிருந்தன. அவளும் உம்மாவும் வீட்டினை விட்டு வெளியேறும் பொழுது,

“ஆம்புள உதவியில்லாம உன்ட மகளோட நீ தனியாப் போய் என்ன செய்யப்போறாய்? உன்ட மகளுக்கு மகரகம ஆஸ்பத்திரியப் பத்தி என்ன தெரியும்?” போன்ற கேள்விகளை உம்மாவின் மீது வாப்பா பொரிந்து தள்ளினார்.

“ஏன் உம்மா உங்கட மனைவிதானே? உங்களுக்கு அவவ கூட்டிட்டு போக ஏலாதா? உங்கட மனைவி உங்களுக்கு துவைக்கும் இயந்திரமாக, சமையல் செய்யும் பாத்திரமாக, தூசு தட்டும் துடைப்பானாக மட்டுமே இருப்பாவா?” அவளுக்குள் இருந்த கடுஞ் சொற்களை ஒன்று திரட்டி தேனீக்களாக மாற்றி வாப்பாவின் முகத்தினை கொட்டிவிட யோசித்தாள்.

தலைக்கு மேல் மயிரிழையில் கட்டப்பட்ட கத்தியொன்று தொங்கிக் கொண்டிருப்பது போல் சுவரில் தொங்கும் திருக்கை மீன் வாலின் ஞாபகம் இடையில் வந்து குறுக்கிட்டது. வைத்தியசாலைக்கு செல்ல இந்த நேரத்தில் மீண்டும் ஒரு அமளி துமளி நிகழ்வதை விரும்பாதவள் போல அச்சொற்களை மென்று விழுங்கினாள். வாய் கசத்தது.

**வை**த்தியசாலையை நெருங்குகையில் புது வருடத்தினை வரவேற்பதற்காக வீதியில் பட்டாசுகள் வெடித்துக் கொண்டிருந்தன. தேவதைகளைப் போன்று வெள்ளை நிற லமாய் சாரி அணிந்து அல்லிப் பூக்களை கைகளில் ஏந்திய சிறுமிகள் விகாரைகளை நோக்கி அணிவகுத்துச் சென்று கொண்டிருந்தார்கள். “புது வருஷ நாளில நாம ஆஸ்பத்திரிக்கு காலடி எடுத்து வைக்கிறோம்” என்ற உம்மாவின் ஏக்கம் கலந்த குரல் விக்கி விக்கி வெளியேறியது. “அப்படியெல்லாம் எதுவுமே இல்லம்மா” என்று உம்மாவினை தேற்றினாள்.

வெள்ளைப் புறாவொன்று ஊர்ந்து வந்து நிற்பது போல் மகரகம வைத்தியசாலையின் முன் வாயிலில் அவளும் உம்மாவும் பிரயாணம் செய்த வேன் நின்றது. பச்சை நிற ஆடை உடுத்திருந்த அந்த மூன்று மாடிக்கட்டிடத்தின் இரண்டாவது தட்டில்தான் டொக்டர் பலவர்தன என்று கதவில் பெயர் பொறிக்கப்பட்டிருந்த அறை இருந்தது. அந்த அறையை நெருங்க நெருங்க இவளது பீதி தொல்லைப்படுத்திக் கொண்டேயிருந்தது. புற்றுநோய் என்ற வலிமை மிக்க எதிராளியுடன் சமர் புரிந்து கொண்டிருக்கும் வீரர்களும் வீராங்கனைகளும் அங்கே அமர்ந்திருந்தார்கள். பெரும்பாலானோர் ஹீமோதிரபி சிகிச்சை முறையினால் தலை முடியினை இழந்திருந்தார்கள். பூக்களை உதிர்ந்த ஊமை மரம் போல் அவர்களுடைய முகங்களில் சோகம் கனத்திருந்தன. சுற்றிச் சுற்றி அங்கேயிருந்த நோயாளிகளையே பார்த்துக் கொண்டிருந்த உம்மாவின் சூனியப் பார்வையை இவள் திசை திருப்புவதற்காக முயற்சித்தாள். உம்மாவின் பெயரும் இலக்கமும் கூப்பிடப்பட்டது. உயிரைக் கையில் பிடித்துக்கொள்வது போல உம்மாவும் கைகளை பற்றியபடி வைத்தியரின் அறையினுள் நுழைந்தாள். வாழ்வா? சாவா? என்ற புதிரை அறிந்துகொள்வதற்கான அறையினுள் நுழைவது போன்ற உணர்வில் அவளது இருதயம் வேகமாக இயங்கியது.

உம்மாவுக்கு ஏற்பட்டுள்ள கருப்பைக் குழாய் புற்றுநோய் இரண்டாவது படித்தரத்தில் உள்ளதாகவும் ஆபத்தான கட்டத்தில் இல்லை எனவும் ஒரு மாத காலம் தங்கியிருந்து சிகிச்சை பெற வண்டும் என்ற வைத்தியரின் செய்தி போன உயிர் மீண்டு வந்தது

(தொடர்ச்சி 25ஆம் பக்கம்)

## வால்ட் விட்மன்

# மேற்கில் உதித்த சூரியன்

ஸிந்துஜா



பத்தொன்பதாம் நூற்றாண்டின் எழுத்தாளர்களிடம் மிகுந்த கிளர்ச்சியை ஏற்படுத்திய ஒரு விஷயம் ஆண்மையைப் பற்றியது. அந்த நாள்களில் பெண்கள் அடக்கி வைக்கப்பட்டு நடமாடிய பொழுதில், ஆண்மையைக் கொண்டாடி எழுதிய எழுத்தாளர்கள் விரைவில் பிரபலம் அடைந்தார்கள். ஆஸ்கர் ஒயில்டு 'கவிதையில் பிரதானமாக ஆண்மையைக் குறித்து எழுத வேண்டும்'என்றஅறிவுப்புடன்எழுத்துலகில்நுழைந்தார். இந்தக் காலகட்டத்தில்தான் அமெரிக்காவில் பிரபல கவிஞரான வால்ட் விட்மனின் பிரவேசம் நிகழ்ந்தது.

அமெரிக்க மக்களிடம் அதிகளவு செல்வாக்குப் பெற்ற கவிஞராகப் பின்னாளில் திகழ்ந்த விட்மன், இதிகாசங்கள் நிறுவும் சட்டதிட்டங்களையும், மரபுக்கு கவிதைகள் வழக்கமாகப் பூணும் அலங்காரங்களையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, சுதந்திரத்தின் எல்லைகளைத் தேடும் கவிஞராக இருக்க விரும்பினார். 1855இல் அவர் தன் சொந்த செலவில் வெளியிட்ட 'புல்லலின் இதழ்கள்' கவிதைத் தொகுப்பு இன்றும் அமெரிக்கக் கவிதை வரலாற்றில் பெரும் மைல் கல்லாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அதன் செறிவான உள்ளடக்கமும் அது தொட்டுச் சென்ற பரந்துபட்ட உலகமும் இன்றும் ஒரு புரட்சிகரமான நூலாக அதை மதிக்கவைத்திருக்கிறது. அவர் சார்ந்த இடத்தில் வளைய வந்த கடல்புரத் தொழிலாளிகளும் மீனவர்களும் ரவுடிகளும் அவர்களின் ஆண்மைத் தோற்றமும் பொலிவும் அவரை ஆகர்ஷித்ததன் விளைவாக அவர்கள் கொண்டாடப்பட வேண்டியவர்கள் என்று தனது கவிதைகளில் பாடினார்.

'ப்ருக்ளின் தோணித் துறையைக் கடப்பது' என்னும் கவிதையில் அவர் தனது இளம் வயதில் தினமும் படகுப் பிரயாணம்செய்தபோதுமனதில்எழுந்தபரவசத்தையும் உற்சாகத்தையும் வடித்திருப்பார். தோணித் துறையை கடந்துசெல்வதைவாழ்வின்முறைமையுடன்ஒப்பிட்டுப் பார்த்து, பிறப்பிலிருந்து மனிதனை இட்டுச் செல்லும் வாழ்க்கைப் பயணத்தை வேதாந்த ரீதியில் அக்கவிதை அணுகுவதை ஒரு வாசகர் உணர முடியும்.

31.5.1819இல் நியூயார்க்கில் வால்ட் விட்மன் எட்டுக் குழந்தைகள் அடங்கிய பெரிய குடும்பத்தில் பிறந்தார். அவருக்குப் பள்ளிப் படிப்பு அவ்வளவாக ஒத்துக்கொள்ளவில்லை. பள்ளியில் குழந்தைகளுக்குத் தரப்பட்ட தண்டனைகளை அவர் மனமார வெறுத்தார். அவருடைய படிப்பு பள்ளி வளாகத்துக்கு வெளியே ஏற்பட்டது. அவருடைய தாத்தா, பாட்டியுடன் லாங்

ஐலண்டில் கழித்த காலங்களில் அவர் எதிர்கொண்ட, நியூயார்க்கின் இரைச்சலுக்கு மாறான அமைதியான சூழல் அவர் மனதுக்கு மிகவும் பிடித்திருந்தது என்று அவர் எழுதிய 'முடிவற்று ஆடிக் கொண்டிருக்கும் தொட்டிலை விற்று' என்னும் கவிதையில் சுட்டிக் காட்டியிருந்தார்.

விட்மனின் பதினோராவது வயதில் பள்ளியை விட்டுவிட்டு ஒரு வழக்கறிஞரின் அலுவலகத்தில் ஊழியனாகச் சேர்ந்தார். அவரது முதலாளி நடமாடும் நூலகம் ஒன்றுக்கு சந்தா செலுத்தி விட்மன் புத்தகங்களை எடுத்துப் படிக்க உதவி செய்தார். வெட்டியாக வெளியே சுற்றாமல், புத்தகங்களைக் கரைத்துக் குடிப்பதிலும், நேரில் காண்பவர்களுடன் உரையாடல் நிகழ்த்துவதிலும் பொழுதைக் கழித்தார். இது அவரது புத்திக் கூர்மையையும் அறிவையும் விசாலப்படுத்தின. அப்போது பிரபல எழுத்தாளர்கள் எழுதி வந்த மரபு வழிப் படைப்புகளை அவர் தவிர்த்து தானே தெரிவு செய்துகொண்ட புதிய மொழியையும் புதிய கருத்துக்களையும் கொண்ட எழுத்துக்களை உருவாக்க முயன்றார். சரித்திரம், பூகோளம், விஞ்ஞானம், நாடகம், இசை, தொல்பொருள் ஆராய்ச்சி என்று பல்வேறு ஈடுபாடுகளைக் கற்றுத் தேர்ந்தார்.

'பேட்ரியாட்' என்னும் பத்திரிகையில் விட்மன் தனது பனிரெண்டாம் வயதில் சேர்ந்த போது வெள்ளைத் தாள்களில் அச்சாகி வந்த எழுத்துக்கள் அவரைப் பிரமிப்புக்கு உள்ளாக்கின. தானும் அம்மாதிரிப் படைப்புகளை உருவாக்கவேண்டும் என்னும் ஆசையில் நியூயார்க் நகரம் உருவான கதையை எழுதினர். 1758இல் தனது 120ஆவது வயதில் இறந்த நீக்ரோ ஹாரி என்னும் கறுப்பின மனிதர், தான் சிறுவனாக இருந்த போது உருவாகிய நியூயார்க் நகரத்தில் இருந்த மொத்த வீடுகள் மூன்றுதான் என்று கூறியதை அடிப்படையாக வைத்து விட்மன் தனது கட்டுரையை எழுதினர். எல்லா எழுத்தாளர்களுக்கும் முதன் முறையாக அச்சில் தங்கள் பெயரைப் பார்க்கும் போது ஏற்படும் சந்தோஷம் தனது வயதான காலத்திலும் அதைப் பற்றி நினைக்கையில் பீறிட்டுக் கொண்டு வந்தது என்று நினைவு கூர்ந்தார்.

தனது முழு நேரத்தையும் எழுத்தில் மட்டுமே செலவழிக்கவேண்டும் என்று விட்மன் திருமணம் செய்து கொள்ளவில்லை. ப்ரூக்ளினிலும், நியூயார்க்கிலும் வாழ்ந்த இளமைப் பருவத்தில் எதிர்கொண்ட அனுபவங்கள் அவரது எதிர்காலத்தையும் எழுத்தையும் செழுமைப்படுத்தின. எப்போதும் மாறிக்கொண்டிருக்கும் நகரத்தின் சூழல்களையும் மனிதர்களையும் அவர் உன்னிப்பாகக் கவனித்து அவற்றைத் தன் எழுத்தின் ஆதார சுருதிகளாக ஆக்கிக் கொண்டார். அவரது பதினாறு வயதிற்குள் , அச்சகத் தொழிலையும், பத்திரிகைத் தொழிலையும் சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தார். ஆனால், துரதிர்ஷ்ட வசமாக நியூயார்க்கில் நடந்த இரண்டு பெரும் தீ விபத்துக்களில் பல பத்திரிகை அலுவலகங்கள் தீக்கு இரையாகின.

அதன் பிறகு ஆசிரியராகப் பல பள்ளிகளில் பணியாற்றி நிராசையுடன் விலகிக் கடைசியில் 'தி லாங் ஐலண்டர்' என்று சொந்தமாகப் பத்திரிகையை ஆரம்பித்தார். ஓர் அச்சகத்தை வாங்கி அவர் உற்சாகத்துடன் நடத்திய தொழில் நஷ்டம் காரணமாக ஓராண்டிலேயே மூடப்பட்டது. அவர் நியூயார்க்கில் குடியேறி, 'தி லாங் ஐலண்ட் ஸ்டார்' என்னும் பத்திரிகையில் தலைமை ஆசிரியராகச் சேர்ந்தார். அங்கு பணியாற்றிய இரண்டு வருடங்களில் அவர் எழுதிய கட்டுரைகளும் கவிதைகளும் பலரது கவனத்தை ஈர்த்தன. கார்லில் , எமர்சன் போன்ற எழுத்தாளர்களின் படைப்புகளை விமரிசனம் செய்தார். 'தான் எழுதுவது தனது சொந்தக் கருத்துக்களைப் பரப்புவதற்காக அல்ல, மாறாக அதை படிக்கும் வாசகர் அவரவர் பார்வையில் எந்த ஒரு விஷயத்தையும் பற்றி சொந்த அபிப்பிராயங்களை உருவாக்கிக் கொள்வதற்காவே' என்று அவர் தெரிவித்தார்.

இம்மாதிரி அபிப்பிராயங்களை உருவாக்குவதன் மூலம், அவர் தேர்வு செய்யும் உழைப்பாளி வர்க்கத்தின் பிரச்சினைகளையும் அவர்களுக்கு கிட்ட வேண்டிய நலன்களையும் பற்றிய பிரக்ஞை, சமூக வெளித்தளத்தில் ஏற்படுத்தும் என்று விட்மன் நம்பினார். ஒரு கட்டத்தில் கறுப்பின உழைக்கும் வர்க்கம் வெள்ளை உழைப்பின வர்க்கத்தைத் தூக்கி எறிந்துவிடும் என்று அவர் அஞ்சினார். வெள்ளை உழைக்கும் வர்க்கம் செல்லும் புதிய இடங்களில் அடிமை முறையை அனுமதிக்கக் கூடாது என்று அவர் வலியுறுத்தினார். தொடர்ந்து அவர் சமூகத்தில் நடமாடிய பலதரப்பட்ட அடிமை முறைகளைக் கண்டித்து எழுதினார். பிரேசிலில் உருவாக்கப்பட்ட ஒரு சட்டத்தின் படி அடிமைகளை இறக்குமதி செய்ய அனுமதிக்கப்பட்டது. இதை விட்மன், ஆபிரஹாம் லிங்கனைப் போலக் கடுமையாக எதிர்த்தார். அப்போது அமெரிக்காவின் ஜனநாயகக் கட்சி அடிமை முறையை ஆதரித்து வந்தது. விட்மன் பணிபுரிந்த பத்திரிகையின் அதிபர் ஜனநாயகக் கட்சியைச் சார்ந்தவராக இருந்ததால் விட்மனின் கறுப்பின மக்கள் ஆதரவு மற்றும் அடிமை ஒழிப்பு முறை ஆகிய கருத்துக்களுக்கு ஒப்புதல் தர மறுத்து விட்மனைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டார்.

1846ல் விட்மனின் வாழ்வில் ஒரு திருப்பம் நிகழ்ந்தது. நியூயார்க்கில் இருந்த பிராட்வே தியேட்டரில் நியூ ஆர்லியன்ஸிலிருந்து வரும் 'கிரசென்ட்' பத்திரிகையின் நிர்வாகிகளில் ஒருவரான ஏ.ஹெச். ஹெய்ஸ் என்பவரை விட்மன் சந்தித்தார். பதினைந்து நிமிடப் பேச்சுக்குப் பின் ஹெய்ஸ் விட்மனிடம் அவரது பிரயாணத்துக்கு முன்பணம் கொடுத்து உடனடியாக நியூ ஆர்லியன்ஸுக்குக் கிளம்பி வரச் சொன்னார்.

நியூ ஆர்லியன்ஸ் விட்மனை வெகுவாகக் கவர்ந்தது. பிரெஞ்சுக் குடியிருப்புகளுக்கும் பிரெஞ்சு சந்தைகளுக்கும் சென்று அங்கிருந்த மனிதர்களுடன் பேசும் போது வாழ்வின் உண்மைகளை எடுத்துக் காட்டும் புதிய வாசல்களைக் கண்டார். மெக்சிகோ போரிலிருந்து திரும்பியிருந்த வீரர்களின் யுத்த அனுபவங்கள், ஸ்பானிஷ், ஆங்கிலம், பிரெஞ்சு என்று பழமொழி பேசி ஒன்றாக வாழ்ந்த மக்கள், நாகரிகத்தின் உச்சானிக் கொம்பில் நடமாடிய நகரம் என்று அவரது அனுபவங்கள் புதிதாக உருவாகி வரும் அமெரிக்காவின் நவீன கலாச்சாரத்தை அறிமுகப்படுத்தின. ஆனால், இவற்றுக்கு அப்பால் அவர் தங்கியிருந்த இடத்திற்குப் பக்கத்திலேயே கறுப்பர்கள் அடிமைகளாக ஏலம் விடப்படும் காட்சிகளைக் கண்ட போது அவர் மிகவும் அதிர்ச்சி அடைந்தார்.

அவரது கறுப்பு மக்களின் மீதான இரக்கம் கிரஸண்ட்



பத்திரிகையிலிருந்தும் அவரை நீக்கிவிட்டது.

1840களின் ஆரம்பத்தில் விட்மன் எழுதியவை மரபு சார்ந்த கவிதைகளாகவே இருந்தன. ஷெல்லி, கீட்ஸ், குறிப்பாகப் பிரியன்ட் ஆகியோரின் தாக்கம் விட்மனின் கவிதைகளில் இருந்தது. 'நமது எதிர்க்காலம், 'பேராசை' 'ஒழித்துக் கட்டுவது', 'இனிமேல் வரும் காதல்' 'இயற்கைக் காதலனின் மரணம்' போன்றவை ஜீவனற்று 'தயாரிக்கப்பட்ட' கவிதைகளாகக் கருதப்பட்டன. 1840களின் இறுதியில் அவர் கண்டெடுத்த கவிதை மொழி, மரபுக்குத் தலை வணங்காததாகவும் ஒரு படி மேலே சென்று எதிர்க் கவிதையாகவும் விளங்கியது. உயிரின் ஜீவனைப் புதிதாகக் கண்டெடுத்த கவிஞராக விளங்கினார். அவரது முந்தைய தலைமுறைகளின் எழுத்துக்களுக்கு முற்றிலும் வேறுபட்ட பாதையில் அவர் பயணிக்க ஆரம்பித்தார்.

1855இல் விட்மன் தன் சொந்த செலவில் 'புல்லின் இதழ்கள்' பிரதியை வெளிக்கொண்டு வந்தார். மொத்தம் 795 பிரதிகள் அடிக்கப்பட்டதில் குறைந்த பிரதிகளே விற்றன. பல எழுத்தாளர்களுக்கு அவர் பிரதியை அனுப்பினார்.

பிரபல எழுத்தாளரான ஜான் க்ரீன் லீஃப் தனக்கு வந்த பிரதியை எரிந்து கொண்டிருந்த அடுப்பில் போட்டார் என்று ஒரு வதந்தி நிலவிற்று. ஆனால் எமர்சன் அவரது தொகுதியைப் படித்து விட்டு எழுதிய கடிதத்தில், 'நெடுங்காலமாய் அமெரிக்க எழுத்தில் படிந்திருக்கும் கசடையும் ஆரவாரத்தையும் அடக்கி ஒழித்து எழுதப்பட்ட இக்கவிதைகளைப் பற்றி நீ மிகவும் பெருமைப்படலாம்' என்று எழுதினர். மேலும் எமர்சன், 'இப்போது விட்மனின் கவிதை ஆணின் முழு சாத்திய பரிமாணங்களையும் வெளிக்கொண்டு வந்திருக்கிறது. 'புல்லின் இதழ்கள்' நான் எப்போதும் தேடி வந்ததை மீட்டுக் கொடுத்திருக்கிறது. விட்மன், ஆணின் முழு சக்தியையும் பேராற்றலையும் தன் கவிதைகளில் வெளிப்படுத்தியிருக்கிறார். அவரது எழுத்து பகவத் கீதையையும் நியூயார்க் ஹெரால்டையும் சேர்த்து வைத்துப் படிப்பது போல சிறந்து விளங்குகிறது!' என்றார்.

விட்மனின் கவிதைகளில் சமுதாயத்தைச்

சுற்றிச் சூழ்ந்திருந்த வறுமை, கல்வியின் தரக் குறைவு, அடிமை முறை, விபச்சாரம், புலம்பெயர்தல் போன்ற பிரச்சினைகள் பாடுபொருள்களாய் இருந்தன. அவர் கவிதையில் ஏற்றுக்கொண்ட புதிய உருவமும் மொழியின் எளிமையும் ஆழமான வீச்சும் இதற்கு முன் எந்தக் கவிஞரும் தீண்டியிராத பிரதேசத்தில் அவர் நடக்க முயன்றதும் மக்களை வெகுவாகக் கவர்ந்தன.

புல்லின் இதழ்கள் முதல்முறையாக அச்சிடப்பட்ட போது அதில் தன் பெயரை விட்மன் வெளிப்படுத்தவில்லை. அவரது புகைப்படம் முன் அட்டையின் உள்புறத்தில் பிரசுரிக்கப்பட்டது. தொழிலாளியின் உடுப்புடன், பட்டன் போடாமல் திறந்து விடப்பட்ட சட்டை, வாரப்படாத தலை, வலது பக்கம் தலையில் சற்றே சாய்ந்திருந்த தொப்பி என்று அச்சாகியிருந்த புகைப்படத்தில் அவரது பார்வை கூர்மையாக வாசகன் மேல் நிலைத்து நிற்பது போல் காணப்பட்டது.

மரபு உருவாக்கிய ஒழுக்கங்களுக்கு உடன்படாத போராளியாக வெளிப்படையாகத் தன்னை நிலை நிறுத்த விட்மன் முயன்றதும் இச்சமயத்தில்தான். அப்போது கலை இலக்கிய ஆளுமைகளின் பரிச்சயம் கிட்டத் தொடங்கியது. அதன் தாக்கங்கள் அவரது கவிதைகளில் வெளிப்பட்டன. பெண் போராளி எழுத்தாளர்களான அபி பிரைஸ், பாலின் ரைட் டேவிஸ், லாரா டின்டேல், சாரா பேஸன் வில்லிஸ் ஆகியோரிடம் அவர் கொண்ட நெருங்கிய பரிச்சயம் பெண்களின் பாலின உணர்வுகளை பற்றிய வெளிப்படையான அபிப்பிராயங்களை அவரது கவிதைகளில் கொண்டு வந்து சேர்த்தது. விட்மனின் பெண்களுக்கான பாலின சுதந்திரக் கவிதைகள் பலத்த எதிர்ப்பைப் பெற்றன. பாஸ்டனில் 'புல்லின் இதழ்கள்' தடை செய்யப்பட்ட போது, "இத்தகைய தடை பெண்களின் சுதந்திர மனநிலையையும் நடமாட்டத்தையும் தடுத்து நிறுத்தும் முயற்சி" என்று விட்மன் கூறினார். ஆனால், புகழ் பெற்ற ஆங்கில எழுத்தாளர் டி.ஹெச். லாரன்ஸ் "விட்மன் பெண்களைக் கருப்பைக்குள் அடைத்துவிடப் பார்க்கிறார்" என்று கூறினார்.

விட்மன், ஓரின ஆண் சேர்க்கையின் மீது கொண்ட காதலைப் பிரதிபலித்து 1860இல் கவிதைகள் வந்தன. மறுபடியும் புல்லின் இதழ்களைப் பதிப்பித்து அவர் கொண்டு வந்த போது அவரது புகைப்படத்தை நூல் தாங்கியிருந்தது! அதைப் பார்த்துவிட்டு ஒரு பாஸ்டன் புத்தகாலயம் அவரது புத்தகத்தை மேலும் சிறப்பாகக் கொண்டுவர முன் வந்தது. அதையொட்டி விட்மன் பாஸ்டன் சென்றார்.

விட்மனின் பாஸ்டன் விஜயம் அந்நகரையே ஒரு இலக்கியக் கூடல் நகரமாக மாற்றிவிட்டது. 'புதிய அட்லான்டிக்' போன்ற பிரபல பத்திரிகைகளும், லாங் ஃபெல்லோ,மெர்சென்போன்றபிரபலஎழுத்தாளர்களும் பாஸ்டனில் இருந்து இயங்கிக் கொண்டிருந்த காலம் அது. பாஸ்டன் 'பிராமணரான' எமர்சனும் வடபுலத்து 'ரவுடி'யான விட்மனும் சந்தித்த ஒருநாளில், விட்மனிடம் எமர்சன், அவரது 'ஆடம்மின் குழந்தைகள்' கவிதைத் தொகுப்பில் உள்ள சில கவிதைகளை எடுத்துவிட்டால் நன்றாக இருக்கும் என்றார். பொதுவாக இதற்குமுன் வந்திருந்த அமெரிக்கக் கவிதை நூல்களில் உடலின் அந்தரங்க பாகங்களையும், பாலின எழுத்துக்களையும் இவ்வளவு வெளிப்படையாக எந்தக் கவிஞரும் பேசியதில்லை என்பதால், அவற்றை நீக்கிவிடுமாறு எமர்சன் கூறினார்.

விட்மன், இதற்குப் பதிலளிக்கையில், "உடல் வேட்கை என்பது மிகவும் சாதாரணமான விஷயம். எதற்காகவும் அதை அசாதாரணமாகப் பார்க்க வேண்டியதில்லை. அது வக்கிரமில்லாத, எல்லோரும் விரும்புகிற, நியாயமான இயல்பு என்றிருக்கும் போது எதற்காகக் கவிதையில் அதை நிராகரிக்க வேண்டும்?" என்று கேட்டார். மேலும் அவர், "ஒருவனுக்கு மூளையும் ஆத்மாவும் எவ்வளவு முக்கியமோ, அந்த அளவு அவனுக்கு அந்தரங்க பாகமும் அக்குளும் இயற்கையானவை!" என்றார்.

'ஆடம்மின் குழந்தைகள்' கவிதைகளின் முதற்பகுதி ஆண் - பெண் உறவுகளின் பாலுணர்ச்சி பற்றியதாய் இருந்தது. பின்பகுதி முழுக்கவும் ஓரின ஆண் உறவு பற்றியமயக்கமொழியில்படர்ந்திருந்தது.இக்கவிதைகள் பாலுணர்வு பற்றியவை மட்டுமே என்று கருதாமல் அவை தனக்கும் தனது வாசகருக்கும் இடையே நிலவும் மன ரீதியான உறவைப் பற்றிய சிந்தனையும் ஆகும் என்று கருத வேண்டும் என விட்மன் குறிப்பிட்டார்.

இதை அடுத்து வந்த 'கேலமஸ்' ஆண்களுக்கிடையேயான ஹோமோசெக்சுவல் உறவைத் தூக்கிப் பிடித்துக் காட்டிய தொகுப்பாக இருந்தது. இதை எதிர்த்து எழுந்த கண்டனக் குரல்கள் எல்லா இடங்களிலிருந்தும் வெளியாயிற்று.

பாஸ்டனின் விட்மன் இருந்த பனிரெண்டு வருஷங்களில் அவர் மாறி வரும் அமெரிக்க வாழ்வைக் காண நேர்ந்தது. கறுப்பர்கள், நியூயார்க் போலன்றி, பாஸ்டனில் கௌரவமாக நடத்தப்பட்டனர். வெள்ளைக்காரர்களுடன் அவர்கள் ஒரே மேஜையில் உணவருந்துவதும், பிரயாணங்களில் அருகருகே அமர்ந்துகொள்வதும் நீதிமன்றங்களில் நீதிபதிகளாகப் பொறுப்பு ஏற்றுக்கொள்ள முடிந்ததும் சாத்தியமாகி விட்டிருந்தது.

விட்மனுக்கு இணையாக அமெரிக்காவில் புகழ்பெற்ற எழுத்தாளர் என்று வில்லியம் ஃபாக்னரைக் குறிப்பிட்டார்கள். ஆனால், அவரும்கூட விட்மன் உலகெங்கும்பெற்றபுகழைஅடைந்துவிடமுடியவில்லை. உலகின் எல்லா மொழிகளிலும் அவரது கவிதைகள் பிரசுரமாயின. அவரது கவிதைகளால் ஈர்க்கப்பட்டு அமெரிக்காவிலும் மற்ற உலகப் பகுதிகளிலும் அவரது பாதிப்புடன் கவிதைகள் எழுதப்பட்டன. தமிழில் மாகாகவி பாரதியார் விட்மனின் கவிதை பாதிப்பில் வசன கவிதைகள் எழுதினர்.

விட்மனைப் பற்றி 1917இல் பாரதியார் சுதேசமித்திரனில் எழுதியது: 'வால்ட் விட்மன் என்பவர் ஸமீப காலத்தில் வாழ்ந்த அமெரிக்க (யூனைடெட் ஸ்டேட்ஸ்) தேசத்துக் கவி. இவருடைய பாட்டில் ஒரு புதுமைஎன்னவென்றால்,அதுவசன நடைபோலேதான் இருக்கும்.... வால்ட் விட்மன் கவிதையைப் பொருளிற் காட்டவேண்டுமேயல்லாதுசொல்லடுக்கில்காட்டுவது பிரயோஜனம் இல்லையென்று கருதி ஆழ்ந்த ஓசை மாத்திரம் உடையதாய் மற்றப்படி வசனமாகவே



எழுதிவிட்டார். இவரை ஐரோப்பியர் காளிதாஸன், கம்பன், ஷேக்ஸ்பியர், மில்டன், தாந்தே, கெத்தே முதலிய மஹாகவிகளுக்கு ஸமான பதவியுடையவராக மதிக்கிறார்கள். வசனத்தில் கவிதை படைத்த விட்மன் உலக மகாகவிகளின் வரிசையில் மதிக்கப்படுபவர்.

கவிதையின் வடிவத்தில் மட்டுமல்ல; பொருளிலும் விட்மன் நிகழ்த்திய புரட்சியை, அப்புரட்சியால் பெற்ற இடத்தை, 'குடியாட்சி (ஜனாதிகாரம்) என்ற கொள்கைக்கு மந்திர ரிஷிகளில் ஒருவராக இந்த வால்ட் விட்மனை ஐரோப்பிய ஜாதியார் நினைக்கிறார்கள்.

எல்லா மனிதரும், ஆணும் பெண்ணும், குழந்தைகளும் எல்லாரும் ஸமானம் என்ற ஸத்யத்தைப் பறையடித்த மஹான்களில் இவர் தலைமையானவர்.'

மேலும், விட்மன் கற்பனை செய்த ஒரு நகரத்தை, அங்கே அடிமையில்லா, ஆண்டையில்லாச் சமத்துவம் நிலவுவதை, பெண்கள் ஆண்களுக்கு நிகரான இடத்தைப் பெறுவதை விளக்கிக் காட்டி,'எல்லாருக்கும் விடுதலையும் ஸமத்துவமும் உள்ளதாகிய நகரம் கண்முன்னே தோன்றுவதை விரும்பாத மனிதனும் உண்டா?' எனக் கேட்டார்.

பாஸ்டனை விட்டு நியூயார்க் வந்த பிறகு விட்மனின் வாழ்வில் திருப்பம் ஏற்பட்டது. அவரது நூல்களைத் திருட்டுத்தனமாகப் பிரசுரித்த பதிப்பகங்களால் அவருடைய பதிப்பாளர்களுக்கு நஷ்டம் ஏற்பட்டது அவரைப் பாதித்தது. சில வாரங்களில் முடிந்துவிடும் என்று நினைத்த உள்நாட்டுக் கலவரம் நான்கு வருஷங்கள் நடந்து போராக மாறி அமெரிக்கப் பொருளாதாரத்தையும்மக்களின்வாழ்க்கைத்தரத்தையும் சீர்குலைத்து விட்டது. போர் நடந்த காலத்தில் விட்மன் காயம்பட்ட வீரர்களுக்காக மருத்துவமனையில் ஆண் நர்சாகப் பணியாற்றினார். காயமுற்று வந்த வீரர்கள் சொல்லிய போர்க்கள அனுபவங்கள் அவரது மனதை மிகவும் பாதித்தன. அவற்றை அவர் அப்போது எழுதிய கவிதைகளில் பிரதிபலித்தார். அவர் அச்சமயத்தில் எழுதிய ஒரு கவிதை இவ்வாறு போகிறது:

அந்நாளின் நரைத்த, மங்கலான
பகல் வேளையில்
என் கூடாரத்தை விட்டு வெளியே வந்தேன்.
வழியில் எதிர்ப்பட்ட குளிர்ந்த காற்று
மற்றோர் கூடாரத்தைப்
பிரித்துப் போட்டது.
படுத்திருந்த மூன்று உடல்களைப் பார்த்தேன்.
ஒவ்வொன்றின் மீதும் கனத்த போர்வைகள்.
ஒன்று பழுப்பு நிறக் கம்பளி.
மற்றொன்று சாம்பல் நிறத்தில்.
மூன்றாவதாக -
அந்த முகம் குழந்தையினுடையதும் அல்ல.
முதியவனதும் அல்ல.
ஆனால், அமைதி நிரம்பிய
மஞ்சளும் வெள்ளையும் கலந்து உருவான
தந்த நிறம்.
இளைஞனே !
உன்னை நான் அறிவேன்.
இந்த முகம்
இறந்துவிட்ட இயேசுவினது.

ஸிந்துஜா <weenvy@gmail.com>

# டி. கண்ணன் கவிதைகள்



## 1. மர்மத்தின் மரணம்

பருவங்கள் பல்லிலித்து விட்டன
உச்ச கொடையின் பின்னிரவில்
அகால ஆந்தைகளைக் காணோம்
பஞ்சம் பிழைக்க வந்த மயில்கள் அகவுகின்றன
பனிக்கால மூலிகைகள் படுத்துறங்குகின்றன
பிரதேசத்திலிருந்து வெளியேறிவிட்டது வசந்தம்
மாரி காணக்கிடைக்காமல் உலர்கின்றன நம்பிக்கைகள்
அழிகிறது மர்மம்

## 2

காண கண் கண்டபோது
சமையலறை பாத்திரங்களுக்கு
பின்னால் இருக்கும் சட்டைகளும்
சட்டைகளுக்கு பின்னால் இருக்கும்
சண்டைகளும் வறுமையும் காதலின்
முத்தங்களும் வந்து போகின்றன
தீய விடாதீர்கள் பாத்திரங்களை...
பாவம் அவை... விட்டு விடுங்கள்

## 3

நள்ளிரவின் பின்னணியில்
ராஜவீதியில்
மாறுவேடமணிந்து
நகர் உலா வந்த அரசனுக்கு எதிர்திசையில்
காற்று வாங்க உலா வந்து கொண்டிருக்கிறான்
அரசன்...
சந்தித்துக் கொண்டார்களா?

## 4. போட்டி

சில பழைய பாடல்கள்
வெவ்வேறு காலங்களை
மீட்டுக் கொண்டு வருகின்றன
அந்த தெருக்களில்
அன்றைய அறிவோடு
நடக்கவே விருப்பம்
இன்றைய அறிவு தானும்
வருவேன் என்று அடம்
பாடலை நிறுத்தினேன்





5.

ஏதோவொரு வெள்ளிக்கிழமை மதியத்திலிருந்து
கோரதத்தை காணவில்லை
அந்த இடத்தில் பெரிய யாளியின் நிழல்
அமர்ந்திருக்கிறது
இரவில் வெண்ணிறத்திலும்
பகலில் நிழலின் நிறத்திலும்
வீற்றிருக்கிறது
இன்று வரை...
கோரதமும் கிடைக்கவில்லை
யாளியின் நிழலும் அகற்றப்படவில்லை

6.

சுருங்கும் பலூன்
மலரும் செங்காந்தள்
தூரத்தே அன்னத்தின் கொட்டாவி
ஒரே கையின் வெவ்வேறு மொழிபெயர்ப்புகள்
ஹூலியோ கொர்த்தஸாரை
படித்துவிட்டு ஒன்று
படிக்காமல் இன்னொன்று
கலங்கி ஒடியது நதி
இம்மணற்பரப்பில்
என்றோ

**டி. கண்ணன் <krishnaswamy164@gmail.com>**

# யார் சமயத்துவம்கொண்ட மனிதன்

மார்டின் பட்லர்

தமிழில்: ஷங்கர்ராமசுப்ரமணியன்

*போர்ச்சுகீசிய நாட்டில் வசிக்கும் மார்டின் பட்லர், சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த ரஷ்ய மெய்ஞானியான குர்ட்ஜிப் அவர்களின் நேரடி மாணவியான ரீனா ஹேண்ட்சின் உதவியுடன், ஆன்மப் பயிற்சிகளில் பல்லாண்டு காலம் ஈடுபட்டவர். மனித நிலைமைகள் பற்றிய ஆழமான புரிதலுக்கு இவர் வருவதற்கு ஸ்பினோஷா போன்ற தத்துவவாதிகளையும் முறையாகக் கற்றிருக்கிறார். என் காலத்தையும் என்னைச் சுற்றியுள்ள நிலைமைகளையும் புரிந்துகொள்வதற்கும் இந்தச் சூழ்நிலைகளுக்குள் எனது விழைவுகள், ஆசைகள், வலிகள் ஆகியவற்றைக் குறைத்துக்கொள்வதற்கும், எனக்கு வழங்கப்பட்டுள்ள வளங்களினூடாக நிறைவாகவும் நீதியாகவும் இருப்பதற்கும், மார்டின் பட்லரின் எழுத்துகள் உதவிகரமாக இருக்கின்றன. மார்டின் பட்லர் என்னிடம் ஏற்படுத்திய பயன்விளைவை இன்னும் சில வாசகர்களும் அடையலாம் என்ற நம்பிக்கையில், எனக்குப் பிடித்தவற்றை மொழிபெயர்க்கிறேன்.*

சந்தோஷத்தை கொடுக்கும் பொருள் அல்லது நபரை நோக்கிய நமது உணர்வுதான் நேசம் என்பது. மகிழ்ச்சியைத் தருகிறார்கள் என்பதற்காகவே மனிதர்கள் பிறரை நேசிக்கிறார்கள்.

தத்துவ அறிஞர் ஸ்பினோஸா இதைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். தினசரி வாழ்க்கையில் சந்திக்கும் உள்ளீடற்ற தன்மை, வியர்த்தம் ஆகியவற்றிலிருந்து விடுபட மனிதன் நிலைத்ததும் நித்தியமானதுமான மகிழ்ச்சியை நாடுகிறான் என்கிறார்.

நாம், நம்மைக் கடப்பதைத்தான் தீர்வாகப் பரிந்துரைக்கிறார் ஸ்பினோஸா. நாம் பிறக்கிறோம்; தற்காலிகமான சந்தோஷங்கள், வலிகளை அனுபவிக்கிறோம்; வயதாகி, நோயுற்று இறந்துபோகிறோம். பெரும்பாலானவர்களின் வாழ்க்கை இப்படியாகத்தான் இருக்கிறது.

எளிய பயிற்சியிலிருந்து தொடங்கலாம். நமது உணர்வு இயல்பு, நம்மைச் சுற்றி நடக்கும் விஷயங்களுக்கு நாம் அளிக்கும் எதிர்வினைகளைச் சற்று தள்ளி நின்று புரிந்துகொள்ளும் பயிற்சிதான் அது. தமது உணர்வு இயல்பின் மீது ஆளுமை செலுத்த முடியாத ஒரு நபர் அந்த உணர்வு இயல்பின் சிறைக் கைதி ஆகிவிடுகிறார் என்கிறார் ஸ்பினோஸா.

உணர்வுகளால் ஒருவர் தின்று செரிக்கப்படாமல், உணர்வுகளின் இயல்பைப் புரிந்துகொண்டு அவற்றை செரித்துக் கடக்கும் திறனை பெறுகிறார் என்று வைத்துக்கொள்வோம், அவர் தனது உணர்வு இயற்கைக்கும் தமது புரிதலுக்கும் இடையில் வெளியைப் படைத்துவிடுகிறார். இது துவக்கம் மட்டுமே. இது பிறர், பிற விஷயங்கள் மீது சரியான கவனம், அறிவார்ந்த அணுகுமுறையைக் கையாள உதவும்.

தன்னிலை அடிப்படையிலான அனுபவத்துக்கு அப்பாற்பட்டு நமது நோக்கு, புரிதலை நீட்டிக்க தற்சார்பற்ற அறிதல் தேவையாக இருக்கிறது. நம்மைச் சுற்றி நிகழும் ஒட்டுமொத்த உயிர் இருப்பைப் புரிந்து ஏற்றுக்கொள்வதற்கு அதுவே உதவியாக இருக்கும்.

சந்தோஷத்தை அளிக்கும் விஷயத்தை மட்டுமே நாம் தொடர்ந்து பயிலமுடியும். நமக்கு மகிழ்ச்சியை அளிக்கும் நிலையில் நமது புரிதலை நாம் நேசிக்கத் தொடங்கிவிடுவோம். நமது தற்காலிகமான, வலிமிகுந்த இருப்பு தொடர்பான அலைக்கழிப்புகளோடு மட்டுமே அடையாளம் காண்பது குறையும். நம்மைவிட மகத்தான ஒன்றுடன் நாம் அடையாளம் காணத் தொடங்குகிறோம். மனித இருப்பு தொடர்பான ஒரு பார்வையும் கிடைக்கிறது. நடைபெறும் நிகழ்ச்சிகளை ஒரு கண்ணாடி போல பார்க்கத் தொடங்கி விடுவோம்.

நமது மொத்தக் கவனமும் நம்மில் குவியும்போது தாறுமாறான அதிர்ஷ்டத்தின் அம்புகளும் உண்டிவில் கற்களும் உங்களைத் தாக்கத் தொடங்கும். எந்தப் பெரிய முக்கியத்துவமற்ற நமது இருப்புக்கு அப்பாற்பட்ட விஷயங்களில் சந்தோஷத்தைக் காணலாம்; அப்போது மட்டுமே ஒரு அற்ப உயிருக்கு ஏற்படும் விதியின் அபாயங்களிலிருந்து சற்றாவது தப்பிக்க முடியும்.

இதைத்தான் ஐன்ஸ்டீன், "நம்மால் அனுபவிக்கப் படக் கூடியதிலேயே அதிகபட்ச அழகுடன் கூடிய உணர்வுநிலை என்பது பகுத்தறிவுக்கு எட்டாத வினோதம் கொண்டது. அதுதான் கலை, அறிவியலின் உண்மையான சக்தியும்கூட. யாருக்கு இந்த உணர்வுநிலை அன்னியமாக இருக்கிறதோ, யாருக்கு அதன் விந்தையுணர்வும் திகைப்பும் இல்லையோ, அவர்கள் இருந்தும் இறந்துபோனவர்களே. நம்மால் ஊடுருவ முடியாத ஒன்று இருக்கிறது என்பதை உணர்வதும் அதுவே உயர்ந்த ஞானமாகவும் அதுவே அற்புத வசீகரமாகவும் இருக்கிறது என்பதை அறியும்போது, நமது தற்போதைய அறிவைக்கொண்டு அதைப் புரிந்துகொள்ள இயலாது என்பதும் தெரியவரும். இந்த அறிவும், இந்த உணர்வும்தான் உண்மையான சமயத்தன்மையின் மையம். இந்த அடிப்படையில் மட்டுமே நான் சமயத்துவம் கொண்ட மனிதன்" என்கிறார். ●



# அம்ருதா அட்சரா பதிப்பக

## வெளியீடுகள் கிடைக்குமிடம்

| | | |
|---|---|---|
| **நியூ புக் லேண்ட்ஸ்**<br>வடக்கு உஸ்மான் ரோடு,<br>தி. நகர், சென்னை-600 017.<br>தொலைபேசி : 044 - 2815 6006 | **ரம்யா புக் வேர்ல்ட்**<br>எண். 160, தலைமைத் தபால்<br>அலுவலகம், விழுப்புரம்.<br>கைபேசி : 94431 78915 | **A.K. சந்திரய்யன் & சன்ஸ்**<br>எண். 252/161B, செரி ரோடு,<br>சேலம்.<br>தொலைபேசி : 0427 2410096 |
| **திருமால் புக் ஷாப்**<br>எண்.17/A, பெங்களூர் சாலை,<br>கிருஷ்ணகிரி.<br>கைபேசி : 94436 31941 | **விஜயா பதிப்பகம்**<br>எண். 20, ராஜா தெரு,<br>கோவை - 641 001.<br>கைபேசி : 94438 50000<br>தொலைபேசி : 2394614 | **புக்ஸ் & புக்ஸ்**<br>எண். 29, நியூ ஸ்கீம் சாலை,<br>பொள்ளாச்சி - 624 001.<br>கைபேசி : 98650 05064. |
| **அருணை புக் சென்டர்**<br>திருவூடல் தெரு,<br>திருவண்ணாமலை - 606 601.<br>கைபேசி : 92453 32365 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண்.79-80, மேற்கு கோபுர வீதி,<br>மதுரை - 625 001.<br>தொலைபேசி : 0452-2344106 | **சர்வோதயா இலக்கியப் பண்ணை**<br>எண்.32/1, மேற்கு வெளி வீதி,<br>மதுரை-1.<br>கைபேசி : 98946 42007 |
| **குமுதம் புக் சென்டர்**<br>எண். 29, VOC பஸ் நிலையம்,<br>பழனி.<br>கைபேசி : 98428 43479 | **மகேஸ்வரி புத்தக நிலையம்**<br>எண். 28, காம்ப்ளெக்ஸ் காம்ப்ளக்ஸ்,<br>ஜீவாபாய் மேல் நிலைப்பள்ளி அருகில்,<br>நல்லிவே ஸ்டேஷன் சாலை, திருப்பூர்.<br>கைபேசி : 94420 04254 | **பாண்டியன் புத்த அகம்**<br>எண். 793, வடக்கு மெயின் தெரு,<br>பிருந்தாவனம் கிழக்கு,<br>புதுக்கோட்டை - 622 001<br>கைபேசி : 99766 93072 |
| **பாவேந்தர் புக் ஸ்டால்**<br>எண். 1, கனகசபை நகர்,<br>நகராட்சி காலனி,<br>மருத்துவக் கல்லூரிச் சாலை,<br>தஞ்சாவூர்.<br>கைபேசி : 93600 18384 | **மார்க்கண்டேயன் புக் காலரி**<br>கும்பேஸ்வரர் சன்னதி,<br>கும்பகோணம் - 612 001.<br>கைபேசி : 96298 15580 | **இளங்கோ புக் சென்டர்**<br>எண். 51/5, நாராயணப் பிள்ளை தெரு,<br>மயிலாடுதுறை.<br>தொலைபேசி : 04364-226188 |
| **அறிவு புத்தக நிலையம்**<br>தெற்கத் தெரு, திருவாரூர்.<br>கைபேசி : 94431 25561 | **பாலா தினகரன் நியூஸ் ஏஜென்சி**<br>காரைக்கால்.<br>கைபேசி : 94431 20637 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண். 4, பெரியார் பழைய<br>பஸ் நிலையம், திருநெல்வேலி.<br>கைபேசி : 98946 66890 |
| **சுகின் புக் சென்டர்**<br>எண். 1/25, சிதம்பரம் மெயின் ரோடு,<br>பாளையங்கோட்டை ரோடு, தூத்துக்குடி<br>கைபேசி : 94436 33333 | **சித்ரா தேவி கல்லூரி புக் சென்டர்**<br>எண். 280, மெயின் ரோடு,<br>கோவில்பட்டி - 628 501.<br>கைபேசி : 98943 25574 | **சுதர்சன் புக்ஸ்**<br>எண். 4, பெல் ஸ்டேஜ் டவுன்,<br>S.P. அலுவலகம் சாலை,<br>நாகர்கோவில் - 629 001.<br>தொலைபேசி : 04652-228445 |

**தொடர்புக்கு : 044-2435 3555 / 94440 70000**

அம்ருதா இதழ் தங்கள் பகுதியில் எங்கு கிடைக்கவில்லை என்பதை
தகவல் தெரிவித்து உதவுங்கள் : **96005 79149 / 97510 51526**

# அட்சரா வெளியீடுகள்

**கோதையின் காதல்**
வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)
ரூ. 290/-

**திருக்கோளூர் ரகசியங்கள்**
வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)
ரூ. 395/-

**சொர்ண பைரவர்**
ஸ்ரீ வேம்பு சித்தர்
ரூ. 80/-

**திவ்ய பிரபந்தம்**
வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)
ரூ. 200/-

**சுப்ரமண்ய ஸ்தோத்திரங்கள்**
நா.அங்கமுத்து முதலியார்
ரூ. 90/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**
வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)
ரூ. 250/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**
வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)
ரூ. 220/-

**அபிராமி அந்தாதி**
ரூ. 130/-

**அட்சரா பதிப்பகம்**
12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,